வி. ஸ. காண்டேகர்

# கருப்பு ரோஜா

கா. ஸ்ரீ. ஸ்ரீ. மொழிபெயர்ப்பு



அல்லயன்ஸ் கம்பெனி
மயிலாப்பூர் :: சென்னை

உரிமை பதிவு
முதற் பதிப்பு
மார்ச்சு, 1950





'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27–1–1979**

அல்லயன்ஸ் பிரஸ்,
மயிலாப்பூர் :: சென்னை-4

## அவர்கள் சொல்வது

'வாழ்க்கைக்காகத்தான் கலை' என்ற கட்சியைத் தட்சிணத்திலே ஸ்தாபித்த ஆசிரியர்களில் ஒருவர் பிரசித்தி பெற்ற மகாராஷ்டிர அறிஞர் வி. ஸ. காண்டேகர். இந்தக் கொள்கை நம் தமிழ் மரபுகளுக்கு முரண்பட்டதல்ல; இசைந்து வருவதுதான்.

கதையுலகில் உல்லாச யாத்திரை, டிஸ.' 49.—ஆனந்தவிகடன்

சமூக அமைப்பு முறையிலே மிகப் புரட்சிகர மான மாறுதல் வேண்டும் என்பதற்கான போர் முரசு, காண்டேகரின் கதைகள்.

திராவிட நாடு, 21-7-46. —ஸி. என். அண்ணாத்துரை

நாவல்கள் மட்டும் அல்ல; அருமையான சிறு கதைகளும் காண்டேகர் எழுதியிருக்கிறார். அவை யும் அலாதியான பாணிதான்.

ஜனவரி '50. —மஞ்சரி

ஸ்வாரஸ்யமான கவர்ச்சி மிகுந்த கதை எழுது வதில் காண்டேகர் கைதேர்ந்தவர். அதை மராட்டியிலிருந்து தமிழில் மொழிபெயர்ப்பதில் கா. ஸ்ரீ. ஸ்ரீ. க்கு நிகர் யாரும் கிடையாது என்ப தில் எள்ளளவும் சந்தேகமில்லை.

ஹிந்துஸ்தான் —ரா. நா.

## எங்கள் நோக்கம்

வி. ஸ. காண்டேகர் இன்று இந்தியக் கதாசிரியர்களில் முதன்மையான ஸ்தானம் வகிக்கிறார். "வாழ்க்கையில் கவலைகள் நெஞ்சைக் கவ்வும் போதும், துன்பங்கள் துயரத்தில் ஆழ்த்தும் போதும் காண்டேகரின் கதைகள் எங்களுக்கு ஆறுதலும் தெம்பும் அளிக்கின்றன" என்று வாசகர்கள் சொல்லும் வாசகமே, அவருடைய கதைகளின் மேன்மைக்குச் சான்று. அவர் இது வரைக்கும் சுமார் முந்நூறு கதைகள் எழுதியிருக்கிறார். எல்லாம் உயர்தரமானவை. அவருடைய கதைகளில் சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்து, வரிசையாக வெளியிடுவதே எங்கள் நோக்கம். ஒவ்வொரு தொகுதியும் கிளேஸ் காகிதத்தில் 80-பக்கங்கள். விலை ரூபாய் ஒன்றேதான்.

வாசகர்கள் எப்போதும்போல அமோகமான ஆதரவு அளிப்பார்கள் என்பது எங்கள் நம்பிக்கை.

—அல்லயன்ஸ் கம்பெனியார்

# கறுப்பு ரோஜா

அவர்கள் இருவரும் இரண்டு ரோஜா மலர்கள்! அவர்களின் நிறம் என்ன? இளம் மக்களின் உடல் நலத்தைப்பற்றி அவர்களுடைய தாய் தந்தையருக்குக்கூட இல்லாத கவலையை ஏற்றுக்கொள்ளும் எழுத்தாளன் நானல்ல. ஆகவே, இந்த நவீன காலத்து ரோஜாக்கள் மங்கிய வெண்ணிறமானவை என்று தளுக்காக வர்ணித்து விகாரமாகச் சித்திரிக்க எனக்குத் தெரியாது. இளைஞர்களுடைய உடலழகிலும் இளம் பெண்களின் மேனிமினுக்கிலும் அக்கறை கொள்வதுபோலவே, அறுபது நாழிகையும் அவர்களுடைய கல்யாணக் கவலையிலேயே மூழ்கிக் கிடக்கும் எழுத்தாளர்களின் கும்பல் ஒன்றும் இருக்கிறது. பெண் குழந்தை தகப்பனைக் கட்டிக்கொள்ளும் பருவத்தை அடைவதற்கு முன்பே, இந்த எழுத்தாளர்கள் அவளைப் பிறமனிதன் கழுத்திலே கட்டிப்போடப் பந்தயக் குதிரைகளைப் போல ஆத்திரத்தோடு விரைந்தோடுவார்கள். இவர்களுடைய கதைகளில் பையன் பெண்ணைத்தான் பார்க்கிறானே! அதுவும் எங்கே? நடுத்தெருவிலும் புகைவண்டியிலும் சோலையிலும் கலாசாலையிலும்! கணப்

பொழுது அவர்கள் ஒருவரை மற்றவர் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான் தாமதம்; உடனே அவர்களுக்கு ஜன்மத்துக்கும் தொடர்பு ஏற்பட்டுவிடுகிறது. இந்தத் தொடர்பைக் கலைக்கப் பிரம்மாவின் தாத்தா வந்தாலும் முடியாது! நான் இந்தக் காதற் கூடாரத்தைச் சேர்ந்த எழுத்தாளனாக இருந்திருந்தால், என் ரோஜாக்களின் நிறம் சிவப்பு என்று உடனே சொல்லியிருப்பேன். காதலும் இடையூறும் சிவப்பு நிறம் கொண்டவை. இந்த ரோஜாப் பூக்கள் மஞ்சளாகவும் இல்லை. குக்கிராமத்திலே 'கஸ்டம் ஆபீஸி'ல் உப்பு மூட்டைகளை நிறுப்பவனுக்கும் பொன்னுக்கும் என்ன சம்பந்தம்? தினசரிகளிலே பொன்னின் விலையைப் படிக்கும்போது மட்டுமே அந்தச் சம்பந்தம் ஏற்படலாம்.

இந்த ரோஜா மலர்கள் வெண்மையல்ல, சிவப்பும் அல்ல, மஞ்சளும் அல்ல. பின்னே அவை கறுப்போ? ஆம், கறுப்புத்தான் என்று சொல்லாமல் என்ன செய்வது? ஆனால் அவை அட்டைக் கறுப்பல்ல. மாநிறம்! வைரச் சுரங்கத்துடனோ கரிச் சுரங்கத்துடனோ அவற்றுக்கு எவ்விதத் தொடர்பும் இருந்ததில்லை. என்னைப் போன்ற கதாசிரியன் அந்த இரண்டு ரோஜாக்களைப் பிற்காலத்திலே ஒரு கதைக்கு நாயக நாயகிகளாக்கிக் கௌரவிக்கப் போகிறான் என்று அவர்களின் பெற்றோர் கனவிலும் கருதி இருக்க மாட்டார்கள். அப்படி இருந்தால் அவர்களுடைய கையேடு பேரேடுகளில் ஸோப்பு, பௌடர் வகையில் இன்னும் கொஞ்சம் அதிகமாகச் செலவழிந்திருக்குமே!

ரோஜாவுக்கு முதல்முதலில் முள் இருந்திராது. கவிகள் யாவரும் தமது உள்ளத்திலே உறுத்திய

முள்ளை அதற்கு அர்ப்பணம் செய்யலாயினர். பிறகு தான், 'முள் இல்லாத ரோஜா இல்லை' என்பது புலனாயிற்று. என்னுடைய இந்தக் கறுப்பு ரோஜாக்களுக்கும் முள் இருந்தது என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இந்தக் காலத்தில் ரோஜாச் செடியில் வேல முள்ளும் நெருஞ்சி முள்ளும் நாகதாளி முள்ளும் இருப்பதாகச் சில சிறுகதை மன்னர்களின் தாம்பத்திய வாழ்க்கை வர்ணனையிலிருந்து தெரிய வருகிறது. இந்த ரோஜா மலர்கள் மட்டும் அந்த வகையைச் சேர்ந்தவையல்ல. இவற்றின் முள்ளும் ரோஜா முள் தான்!

"பூனைக்குட்டியை மடியில் விட்டுக் கொள்கிறீர்களே. அதன் உடம்புச் சூடு உங்களுக்குப் பிரியமாக இருக்கிறதாக்கும்!" என்று அவள் சொல்வாள்.

"பொன் வைக்கிற இடத்திலே பூவை வைப்பது போல என்பார்களே! ஒரு பொன்மேனி இந்த வீட்டிலே வந்து விளையாடட்டும். உடனே—" என்று அவன் இழுப்பான்.

"சும்மா இருங்கள்!" என்னும் தலைவன், இந்த விவாதக் கூட்டத்தை வெறும் சமிக்கினையினால் முடித்து வைப்பான்.

பட்டினி கிடப்பது அவளுக்குப் பழக்கமாகி விட்டது. "ஏன் பட்டினி இருக்கிறாய்?" என்று அவன் கேட்பான்.

"நான் யாருக்காக உபவாசம் இருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று அவள் பதிலுக்குக் கேட்பாள்.

"யாருக்காக இருக்கிறாய்? பிறருக்காக உபவாசம் கிடக்க நீ காந்தியா என்ன?"

"நான் காந்திதான். சரி, நான் காந்தி; நீங்கள்—"

"நான் யார்? நீலா நாகினியா?"

"சேச்சே! நீங்கள் வைஸ்ராய்."

அப்பொழுதைய அவளுடைய அபிநயம், குலப் பெண்கள் சினிமாவில் நடிக்கலாமா கூடாதா என்ற சிக்கலைத் தீர்த்துவிடுவதாக இருக்கும். பிறகு என்ன? அரைக்கணத்திலே காந்தி இர்வின் ஒப்பந்தத்தையும் தோற்கடிக்கும் உடன்படிக்கை ஏற்பட்டுவிடும்.

அவளுக்குத் தூக்கம் சிறிது - கதாநாயகி இப்படி இருப்பது நல்லதல்ல என்பது தெரிகிறது; ஆயினும் உண்மையைச் சொல்லப் போனால் நிறைய—அதிக மாகத்தான் வரும். அவள் ஏழைப் பெற்றோர்களுக்குப் பிறந்தவளாயினும் ஒரே செல்வக் குழந்தையாக வளர்ந்தவள். பிறந்த வீட்டில் அவள் தூக்கத்தைக் கலைப்பவர் யாருமில்லை. மணமான பிறகு மட்டும் என்ன? பிரிவினால் தூக்கம் கலையுமே என்றால், அத்தகைய சந்தர்ப்பமே பெரும்பாலும் நிகழ்ந்ததில்லை. உப்பு இலாகாவில் குமாஸ்தா என்றால் நாட்டுப்புறத்து வாழ்க்கை. கணவனுக்குச் சாப்பாட்டுக் கஷ்டம் கூடாது என்பதற்காக அவள் பிறந்தகமே போவதில்லை. அவள் மூளையிலே கவிதை சுழலவில்லை; கழுத்திலே மாதர் சங்கத்தில் தலைமை வகித்த மாலை அசையவில்லை; கையிலே பூத் தையல் போடுவதற்குக் கைக் குட்டை இல்லை; கால்களுக்கோ ஊர் சுற்றும் பழக்கம் இல்லை. பொழுது போக்குவதற்கு அவளுக்குப் பாவம், தூக்கத்தைத் தவிர வேறு வழி ஏது? அவள் பொழுது போக்குக்காகப் பெண்களுக்கென்றே வரும் ஒரு மாதப் பத்திரிகையை அவன் வரவழைத்தான். ஆனால் அவள் அதைப் படிக்கும் போக்கைப் பார்ப்பவர்கள்,

அது பெண்களுக்காக வரும் பத்திரிகையல்ல என்றே எண்ணுவார்கள்! நடுநடுவே அவன் பிரசித்த நாவல்களுள் ஏதாவதொன்றை வாங்கிவருவான். அந்த நாவலைவிடத் தூக்கந்தான் அவளை மயக்கும். பெரும் புகழினால் இறுக்குப் பிடித்து அலையும் எந்த நாவலாசிரியன் கண்ணிலும் மிளகாய்ப் பொடியைத் தூவும் சாமர்த்தியம் அவள் தூக்கத்துக்கு இருந்தது.

இப்படித் தூங்கியதால் அவன் அடிக்கடி அவளைப் பரிகாசம் செய்வான். "இரவில் வீட்டில் திருடன் புகுந்தால்கூட உனக்குச் சந்தடியே தெரியாது" என்பான்.

அவள் தற்காப்புக்குரிய கடைசி முயற்சியாக, "அதனால்தானே, நீங்கள் எனக்கு நகை செய்து போடுவதில்லை! அப்படித்தானே?" என்பாள்.

"நீ ஏன் இப்படிப்பட்ட கணவனைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினாய்?"

"அப்பொழுது நான் தூக்கத்தில் இருந்திருப்பேன்."

இன்னொரு சமயத்திலே அவன், "உனக்குச் சிறு குழந்தையைக் கண்டால் ஏன் பிடிக்கிறது என்பது எனக்கு இன்றுதான் தெரிந்தது" என்பான்.

அவள் முகத்தைச் சுளித்துக்கொண்டே, "ஏதாவது உங்களுக்குத் தோன்றியதைச் சொல்லிக் கொண்டிருப்பீர்கள். தம்மிடம் இல்லாத பொருளைத் தான் மனிதர்கள் வேண்டுகிறார்கள்" என்பாள்.

"அடி பைத்தியமே! மனத்தத்துவ சாஸ்திரத்தின் வாசனையே உனக்கு அடியோடு இல்லையே?"

"வேண்டாமே; அதனால் அடுப்பு ஒன்றும் புகையாமல் இருக்கப் போவதில்லை."

"சிறு குழந்தையைக் கண்டால் உனக்குப் பிடிப்பதற்கு முக்கியமான காரணம்—"

"சொல்லுங்கள், உங்கள் புதிய ஆராய்ச்சியையும் தெரிந்துகொள்கிறேன்."

"அதற்குக் காரணம்: சிறுகுழந்தை நீண்ட நேரம் தூங்குகிறது என்பதுதான்."

"பெரியவர்களுக்குத் தூக்கம் வராததனால் அவர்கள் வளவளவென்று பேசிக்கொண் டிருப்பார்கள்."

இந்த ரோஜாக்களின் முள் இப்படி இருந்தது. அன்புள்ள இந்தத் தம்பதிகளின் பெயரைச் சொல்லாமல் நான் அவர்களை ரோஜா என்று சொல்வானேன் என்று பலர் நினைக்கலாம். நான் சொல்வதற்குக் காரணம் ஒன்று இருக்கிறது. மனிதர்களுக்கு ஏன் பெயர் வைக்கிறார்கள்? ஒருவர் மற்றவரைத் தெரிந்துகொள்வது சுலபமாக இருக்க வேண்டும் என்றுதானே? அப்படிப் பார்த்தால் இந்த ஜோடியை ரோஜா என்று சொல்வதே பொருத்தமானது. ரோஜாப் பூ என்றால் அவனுக்கு வெகு ஆசை. அப்பொழுது பறித்த ரோஜா மலரின் மோகன மணத்தை உள்ளத்திலே நிரப்பிக்கொண்டு அவன், "இந்த ஒரு கணத்திலே மனிதப் பிறப்பே பயன் பெற்றுவிட்டது" என்பான்.

ஒரு ரோஜா இதழின் பின்னால் கூத்தாடும் மற்றொரு பெரிய ரோஜா இதழைக் கண்டதும், இந்த இதழ்கள் யாவும் சேர்ந்து கும்மியடிப்பதாக அவள் நினைப்பாள். ரோஜாவின் நறுமணமே அவற்றின் கீதமாக அவளுக்குத் தோற்றும்.

அன்றும் அதுதான் நிகழ்ந்தது. தலைமைக் குமாஸ்தாவின் மனைவியிடமிருந்து ஒரு பொட்டலத்தையும் பெரிய செய்தியையும் கொண்டுவந்தான் சேவகன்.

தலைமைக் குமாஸ்தா என்றால் அந்தக் குக்கிராமத்திலே பெரிய மனுஷர். அவர் மனைவி அன்று பிற்பகலில் அவளைப் பார்க்க வருவதாகச் சொல்லியனுப்பினாள். அதைக் கேட்டு அவள் ஆச்சரியத்திலே மூழ்கிப் போனாள். அந்தப் பொட்டலத்தைப் பிரித்துப் பார்க்கக்கூட அவளுக்கு ஞாபகமில்லை. இம் மாதிரியான சந்தர்ப்பத்தில் கணவன் வாய் சும்மா இருக்குமா? "பகலிலே நீ தாழ்ப்பாளைப் போட்டுக் கொண்டு தூங்கிவிடாதே!" என்றான்.

"ஏன்?"

"நீ கதவை அடைத்துவிட்டுத் தூங்கும்பொழுது அந்த அம்மாள் வந்தால்? உன்னைப் பார்க்காமலே அவள் திரும்பிப் போவாள். பிறகு அது திடுக்கிடும் சம்பவமாகிவிடும்; நாவல்களில் வருவதுபோல!"

கணவனுடைய கருத்து அவளுக்கு விளங்கியது. பகலில் கண்ணசையும்போது கதவைச் சிறிதளவு திறந்து வைக்கவேண்டும் என்று அவள் தீர்மானித் தாள். ஆனால் பேச்சிலே தோல்வியடையக் கூடா தென்று எண்ணி, "தலைமைக் குமாஸ்தாவின் மனைவி, நாவலில் வரும் திடுக்கிடும் சம்பவத்தைப்போல. நான் எப்படி?" என்றாள்.

"நீயா! நீ வசன கவிதை."

"மட்டாகத்தான் இருக்கிறது பொல்லாத் தனம்!"

அவன் அந்தப் பொட்டலத்தைப் பிரித்தான். அதில் என்ன இருந்தது? இரண்டு ரோஜா மலர்கள்! இரண்டும் சமமாக இருக்கக்கூடாதா? ஒன்று பெரியது; பச்சைப்பசேலென்ற இலைகளுக்கு நடுவே ஒய்யாரமாகத் தலை நிமிர்ந்து ஆடியது. மற்றொன்று

சிறுத்தது; வாடிப்போனது; இலையற்றது. நல்வினையும் தீவினையும் உருவெடுத்தவைபோல இருந்தன, அந்த மலர்கள். இரண்டே பூக்கள்! ஆனால் அந்த ஊரில் ரோஜாவைக் காண்பதே அரிது. பெரிய ரோஜாப்பூவின் மணத்தை அவன் நுகர்ந்த வண்ணம், "எவ்வளவு அழகான பூ!" என்றான்.

அவள் கண்ணும் அந்தப் பூவின்மேல் விழுந்தது.

அந்த மணத்தைப்போன்ற இன்ப வெறியில், "பூ என்றால் இப்படி இருக்கவேண்டும்! சட்டையில் அணிந்துகொண்டால் வெகு நேர்த்தியாக இருக்கும்!" என்று கூறி, அவன் அந்தப் பூவை ஆசையோடு பார்த்தான். அவள் என்ன செய்கிறாள் என்பதையே அவன் கவனிக்கவில்லை. அவளும் மிகுந்த ஆவலோடு அந்த மலரைப் பார்த்துக்கொண்டிருந்தாள். எடுத்துக் கட்டிய தன் கூந்தலிலே அந்தப் பூவைச் செருகிக் கொண்டால் எவ்வளவு அழகாக இருக்கும் என்ற கற்பனையிலே அவள் மனம் ஈடுபட்டது. இருவருடைய பார்வையிலும் ஒரே உணர்ச்சிதான் தென்பட்டது. அந்த மலரை நுகரும் உணர்ச்சி.

பெரிய ரோஜாப்பூவை எடுத்துக்கொண்டு அவன் சமையலறையிலிருந்து வெளிவந்து, அங்கிருந்து இயல்பாகத் திரும்பி அவளைப் பார்த்தான். அவள் பார்வை விசித்திரமாக இருந்தது. பசியால் வாடும் சிறு குழந்தையின் பார்வையைப் போல இருந்தது. அவன் சடக்கென்று, "இந்தா, இந்தப் பெரிய பூவை நீ எடுத்துக்கொள். இது எனக்கு எதற்கு? இந்தச் சிறிய பூவே எனக்குப் போதும்" என்றான்.

ஆபீசுக்குப் புறப்பட அவன் அவசர அவசரமாகக் கோட்டை எடுத்த பொழுது கவனித்தான்:

அந்தப் பெரிய ரோஜாப்பூ அதில் செருகியிருந்தது. உள்ளே போய் அவளுக்கு இம்மாதிரியே ஓர் அழகிய பரிசு அளிக்க வேண்டும் என்று நினைத்தான். அதை விட மற்றொன்று செய்யலாம் என்று தீர்மானித்தான்.

வழியிலே அவனுடைய ஸைக்கிளின் சக்கரங்கள் இரு ரோஜாமலர்களாக அவனுக்குக் காட்சியளித்தன.

பகலில் இடைநேரத்தில், ஆபீசிலிருந்த மற்றக் குமாஸ்தாக்கள் விரல்களைச் சொடுக்கிக்கொண்டும் கொட்டாவி விட்டுக் கொண்டும் எழுந்தார்கள். இவன் மட்டும் சிரித்துக்கொண்டே கிளம்பினன். இடையில் அரைமணி நேரத்தில் இவன் அன்று வீட்டுக்குப் போய்வரக் கிளம்பியதைக் கண்டு இவனைவிட மூன்று மடங்கு சம்பளம் வாங்கும் தலைமைக் குமாஸ்தா பெருமூச்சு விட்டார். அன்று காலையில் அவர் வீட்டு அதிதேவதையான மகாகாளி விடுத்த துப்பாக்கி வெடிகளின் புகை போல இருந்தது அந்தப் பெருமூச்சு. இந்தக் குண்டுவீச்சு அவர் வீட்டில் நாள்தோறும் நடப்பதுதான். வீடாவது! அது ரணகளந்தான். 'தண்ணீர் வெள்ளத்தைப் போலவே ரத்த வெள்ளத்தின் உற்பத்திஸ்தானமும் குறுகலாகத்தான் இருக்கும்!' என்ற விதி இந்த வீட்டு யுத்தத்திலும் அநுபவத்தில் கண்ட விஷயம். அன்று காலையில் கணவனுக்கும் மனைவிக்கும் சண்டை ஆரம்பமானதற்குக் காரணம் ரோஜா மலர்தான். அந்தக் குக்கிராமத்தில் ரோஜாப்பூ கிடைப்பது மிகவும் அரிது. தலைமைக் குமாஸ்தாவின் பங்களாவிலே மட்டும் அவை பூத்தன. அன்று சுமார் இருபது பூக்கள் பூத்திருந்தன. ஆனால் தலைமைக் குமாஸ்தாவின் மனைவி, அந்தக் குமாஸ்தாவின் மனைவிக்கு அனுப்பிய

பொட்டலத்தில் இரண்டு பூக்களை வைத்திருந்தாள். அவற்றில் ஒன்று வாடிய பூ. இதை அவர் பார்த்து விட்டார். குமாஸ்தாக்களின் வாய்க்குப் பயப்படாத மேலதிகாரி உண்டா? குமாஸ்தாக்களோ எப்போதும் அற்பங்கள்! அவர்கள் வாய் கண்டபடி பேசும்! எனவே தலைமைக் குமாஸ்தா தம் மனைவியின்மேல் எரிந்து விழுந்தார்; அவள் அவர்மேல் பாய்ந்தாள்; துப்பாக்கிகள் வெடித்தன; குண்டு வீச்சுகள் நிகழ்ந் தன; கன்னங்கள் சிவந்தன—போரின் முடிவு என்ன? மீதியிருந்த ரோஜாப்பூக்கள் வெந்நீர்த் தவலையில் மிகுந்திருந்த தண்ணீரில் போய் விழுந்தன. இடைநேர விடுமுறையில் அவசரமாக வீட்டுக்குப் போகும் குமாஸ் தாவின் சட்டையிலே ரோஜாப்பூ மிளிர்வதைக் கண்டு, தலைமைக் குமாஸ்தாவுக்கு அந்தத் தவலையில் எறிந்த ரோஜா மலர்களின் ஞாபகம் வந்தது. அவர் தம் கண்ணீரைத் துடைத்துக்கொண்டார்.

தலைமைக் குமாஸ்தாவின் மனைவி பிற்பகலில் வரப்போவதால், அடியோடு தூங்கக்கூடாது என்று தீர்மானித்து, அவள் வெளிக்கதவை ஒருக்களித்து வைத்துவிட்டு, ஒரு நாவலை எடுத்துக்கொண்டு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தாள். நாவலில் கதாநாயகனைப் பற்றிய அழகிய வர்ணனையைப் படித்தபொழுது அவளுக்குத் தன் கணவன் எதிரே நிற்பது போல இருந்தது. ‘சட்டையில் பெரிய ரோஜா மலரைக் கண்டதும் அவர் ஆனந்தமாகச் சிரித்திருப்பார்; மாலை யில் வீடு வந்ததும் அவர் என்னை அன்போடு பார்ப் பார்; அப்புறம்—’

இப்படிக் கற்பனையில் மூழ்கியிருந்தபோது அவள் கண்ணயர்ந்தாள். இனிய கனவு கண்டாளோ

என்னவோ, வெகு நேரம் வரையில் அவள் எழுந்திருக்கவே இல்லை; கடைசியில் திடுக்கிட்டு விழித்தாள். பார்த்தால் மணி மூன்றுக்குமேல் ஆகிவிட்டது! 'தலைமைக் குமாஸ்தாவின் மனைவி வந்து திரும்பிப் போயிருப்பாளோ? கதவைத்தான் திறந்து வைத்திருக்கிறேனே!' என்று அவள் யோசித்தாள். பரபரப்போடு எழுந்து முகத்தைக் கழுவிக்கொண்டு, கூந்தலைச் சரிப்படுத்திக்கொள்ள நிலைக்கண்ணாடியின் முன் வந்து நின்றாள். 'மேலதிகாரியின் மனைவி இன்று தானாகவே நம்மைப் பார்க்க வருகிறாள். அந்த வாடிய சிறு ரோஜாவைச் சூட்டிக்கொண்டால் என்னவோபோலத்தான் இருக்கும். காலையில் ரகசியமாக அந்தப் பூவைக் கொண்டுபோய் அவர் கோட்டில் செருகினேனே! அதை நானேகூட வைத்துக்கொண்டிருக்கலாமே' என்று நினைத்தாள். ஆனால் அந்த நினைப்பு ஒரு கணங்கூட நிலைத்திருக்கவில்லை அந்தச் சிறிய பூவை அவள் தேடினாள். அது எங்கும் அகப்படவில்லை. அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. மனச்சோர்வுடன், கண்ணாடி முன் நின்று, கூந்தலைப் படிய வைக்கலானாள். திடீரென்று அவள் சோர்வு மறைந்தது!

பிச்சோடாவிலிருந்து அந்தப் பெரிய ரோஜாப் பூவை எடுத்து அவள் உற்றுப் பார்த்தாள். காலையில் கிடைத்த மலரேதான் அது. 'ஆனால் ஆபீசில் அவருடைய சட்டையிலிருந்து என் பிச்சோடாவுக்கு இது எப்படி வந்தது? நம்முடைய தூக்கமோ சொல்ல வேண்டியதில்லை! அவர் மெதுவாக வந்து, கதவை மெல்லத் திறந்து......சரி, சாயங்காலம் அவரைச் சும்மா விடக்கூடாது!' இப்படி அவள் எண்ணம் ஓடியது.

வெகு நேரம் வரையில் அவள் தனக்குள்ளே சிரித்துக்கொண்டாள். மேலதிகாரியின் மனைவி வந்த பிறகுதான் அவள் சிந்தனை கலைந்தது.

அன்றிரவு மனைவியிடம் தாற்காலிகமாகச் சமாதானம் செய்ய விரும்பிய தலைமைக் குமாஸ்தா இந்தத் தம்பதிகளின் பேச்சை எடுத்தார். "எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறான் அந்த மனுஷன்! இன்று அவன் சட்டையில் அந்தப் பெரிய ரோஜாப்பூ இருந்தது. அந்தப் பூவைப் போலவே அவனும் இருந்தான். நம் குடும்பமுந்தான் இருக்கிறதே, காட்டு முள்ளைப் போல!" என்றார்.

அந்த அம்மாள் விஷப்பார்வையோடு அவரைப் பார்த்துக்கொண்டே, "உங்களுக்கு எப்போதுமே சொந்த வஸ்து பிடிக்காது; அயலார் பொருள் அழகாக இருக்கும். அவன் சட்டையிலே சின்னப் பூ இருந்திருக்கும். பகலில் நான் அவளைப் பார்க்கப் போயிருந்தேன். அவள் பிச்சோடாவில் அந்தப் பெரிய பூ இருந்தது. எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறாள் தெரியுமா அவள்! அவள் கணவன் அவளைப் பூப்போல வைத்துக்கொண்டிருப்பான். நம் குடித்தனமும் இருக்கிறதே, வெறும் காட்டுமுள்போல!" என்றாள்.

தலைமைக் குமாஸ்தாவின் பங்களாவில் காட்டு முட்கள் யாவும் குவிந்துவிட்டதனால், அந்த நேரத்திலே அந்தக் கறுப்பு ரோஜாக்கள் இரண்டும் தமது சிறு கூட்டுக்குள்ளே முள் இல்லாமல் மலர்ந்திருந்தன.

# கல்லும் கரையும்

ஆகாயத்தில் அடர்ந்த கருமேகங்கள் கதிரவனை மறைத்தன. 'என்ன பயங்கரமான படுகொலை இது!' என்று நினைத்துத்தான் ஆகாயம் கண்ணை மூடிக் கொண்டது போலும்!

'டப்-டப்-டப்' என்று மழைத் துளிகள் விழுந்தன. ராஜகவிக்கு உற்சாகம் கிளம்பியது. "அரசே, ஆகாயத்தின் கண்ணிலிருந்து கண்ணீர் உதிருகிறது" என்றான்.

எதிரே பரவியிருந்த பிணக்குவியல்களை வெறியோடு பார்த்துக் கொண்டிருந்த அரசன் பாஷாண வர்மா, இதைக் கேட்டு, "அதுவும் பௌத்த தருமத்தில் தீக்ஷை பெற்றுக் கொண்டிருக்கிறது போலத் தோற்றுகிறது!" என்றான்.

திக்விஜயம் செய்த அரசனின் மணிவாக்குக்குக் கேட்க வேண்டுமா? அவனுடைய ஒவ்வொரு வாக்கும் பெரிய கடல்மீன் வாலைச் சுழற்றி வீசுவது போல் வெகு தீவிரமாக இருக்கும். அவன் வார்த்தையைக் கேட்டு, அக்கம்பக்கத்திலிருந்த சேனைத் தலைவர்களிடையே சிரிப்பின் வேகமான அலைகள் எழும்பின.

சற்று நேரத்தில் மேகங்கள் கிடுகிடென்று கம்பீர கர்ஜனை செய்யலாயின.

ராஜகவிக்கும் கிறுக்கு ஏறியது. "மேகங்களல்ல; கருநிறச் சிங்கங்களே இவை! பாருங்கள், அவற்றின் கர்ஜனையை!" என்றான்.

போர்க்களத்தில் காயமடைந்து விழுந்தவர்களின் முனகல்களோடு சேர்ந்த கருணைக் குரல் தொலைவி

விருந்தே காதில் விழுந்தது. அரசன் அந்தக் குரலைக் கேட்டு, "நீங்கள் சொன்னது தவறு, கவிராயரே! கருநிறச் சிங்கங்களாவது, மண்ணாவது, அதெல்லாம் ஒன்றுமில்லை. ஆகாயம் 'நமோ புத்தாய, நமோ புத்தாய' என்கிறது" என்றான்.

அரசனுக்குப் பிடித்தவை மூன்று விஷயங்களே—போரும், புத்தரை நிந்திப்பதும், நாட்டியக்காரியும். தன் கையிலிருந்த சுடர்வாளின் ஜண ஜண ஒலியைப் போலவே, நர்த்தகியின் சிலம்பு மணிகளின் இனிய ஒலியும் அவனுக்குப் பிரியமாக இருந்தது. எதிரிகளோடு பொருதும் அவன் புஜங்கள்; புத்த பகவானைப் பழிக்கும் அவன் நாக்கு; நர்த்தகியின் ஆடலைப் பார்க்கும் அவன் கண்கள்;—இவற்றில் ஒவ்வொன்றிலும் அவ்வப்பொழுது அவனுடைய பஞ்சப் பிராணனுமே அடங்கி நிற்கும்.

யுத்த வெறியும் நாட்டிய ஆசையும்! சாவின் கொடும் பற்கள் எங்கே? கலையின் புன்முறுவல் எங்கே? ஆனால் இந்த வேறுபாட்டுக்கும் பாஷாண வர்மா மிக வேடிக்கையாகச் சமாதானம் சொல்லுவான்! "பிரளயகாலத்தில் ருத்திரன் தாண்டவ நிருத்தியம் புரிகிறான். அந்த நிருத்தியத்தை அவன் சுடுகாட்டில் கற்றுக்கொள்ளவில்லை. பூதகணங்களையும் அவன் குருக்களாகக் கொள்ளவில்லை. அவை யாவற்றையும் அவனுக்குக் கற்பித்தவள் பார்வதிதான். அவள் வேடப் பெண்ணாகித் தன் மோகன நாட்டியத்தால் அவனைப் பித்தனாக்கிவிடவில்லையா?" என்பான்.

ஆகாயத்தில் மின்னல் வீசியது. ராஜகவி அரசனுக்குக் களிப்புண்டாக்கக் கருதி, "அரசே, ஆகாயம்

'ஐயோ பௌத்த தர்மமே, பௌத்த தர்மமே!' என்று வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொள்கிறது. பாருங்கள்" என்றான்.

ஆனால், மின்னல் வீச்சைக் கண்டதும், அரசனின் தூங்கியிருந்த வேட்கை விழித்துக் கொண்டது. அவன், "பேஷ்! இடிகள் தாளம் போடுவதற்கு ஏற்ப மின்னல் நாட்டியமாடுகிறது. வாருங்கள், கூடாரத்துக்குப் போவோம். ஓர் அழகிய நர்த்தகியை அழைத்து வாருங்கள்!" என்றான்.

எல்லாருடைய தொண்டைத் தண்ணீரும் வற்றியது. நகரம் முழுதும் யுத்த பீதியால் நடுங்கிக் கொண்டிருக்கிறது. எதிரிலோ பிரேதக் குவியல்கள்! இப்படிப்பட்ட நேரத்தில், நகரத்துக்கு வெளியிலுள்ள கூடாரத்துக்கு நர்த்தகியை எங்கிருந்து அழைத்து வருவது?

நல்ல வேளையாக ஒருவனுக்கு ஞாபகம் வந்தது; அன்று பகலில் நகரத்தைக் கொள்ளையடிக்கும் போது, சிலரைச் சிறைப்படுத்திக் கொண்டு வந்தார்கள். அவர்களில் ஒரு நாட்டியக்காரியும் இருந்தாள்.

உடனே சேனைத் தலைவர்கள் மகாராஜாவின் கட்டளையை அமலுக்குக் கொண்டுவரப் புறப்பட்டார்கள்.

"என்ன கவிராயரே! போகலாமா கூடாரத்துக்கு?" என்று அரசன் கேட்டான்.

கவி வியாகுலப் பார்வையுடன் போர்க்களத்தை நோக்கிக்கொண் டிருந்தான்.

"என்ன பார்க்கிறீர்கள், கவிராயரே!"

"ஒன்றுமில்லை; என் நண்பனொருவன் போரில் விழுந்தான். அவனுடைய பிணத்தை ஒரு தரம் பார்க்க வேண்டும்."

"உங்கள் உடலுக்குள்ளும் புத்தர் அவதரித்திருக்கிறார் போலும்! போகட்டும் ஐயா! செத்தவன் செத்தான்; ஒழிந்தான் ஒரு வழியாக! என்னைப் போன்ற திக்விஜயியான அரசனுடைய கவி, இவ்வளவு பலவீனமுடையவனாக இருக்கலாமா?"

சற்றுத் தூரம் சென்றதும், "அஹ்ஹா! சங்கீதம் காதில் விழுகிறதா?" என்று அரசன் கேட்டான்.

கவிக்கு உடல் முழுதும் சிலிர்த்தது. முனகல்கள். புலம்பல்கள், 'தண்ணீர், தண்ணீர்!' என்ற கூக்குரல்கள்—எல்லாம் ஒரே அபஸ்வரம்!

தன்னையும் அறியாமல் அவன் கண்களில் நீர் தேங்கியது.

அரசன் அதைக் கவனித்தான். உடனே கடுமையான குரலில், "என்ன கவிராயரே, நீங்கள் இப்படி அழுகிறீர்களே? கண்ணீர் பலவீனர்களின் கண்ணுக்கு அல்லவா அழகு?" என்றான்.

அதே சமயத்தில் மின்னல் மின்னியது. திக்விஜயியான அந்த அரசனின் கண்ணிலும் இதயத்திலும் அது ஒளியை வீசியது போலும்! கண்ணா அது? இதயமா அது? அல்ல, அல்ல; சலவைக் கல்!

அதைப் பார்த்த கவிக்கு, "கல்லிலிருந்தும் எப்போதாவது கண்ணீர் கனிந்து உருகுமா?" என்று தோன்றியது. நண்பனின் சவத்தைத் தொடாமலே, அவன் அரசனோடு கூடாரத்துக்குச் சென்றான்.

சிறைப் பெண்களுக்குள் நாட்டியத்தில் வல்லவளான ஓர் அழகிய வேசி இருந்தாள்.

"உன் நாட்டியத்தின் விலை என்ன?" என்று சேனைத் தலைவர்கள் அவளைக் கேட்டார்கள்.

பொன் நாணயங்களின் எண்ணிக்கை பரபர

வென்று ஏறிக்கொண்டே போயிற்று; ஆனால் புஷ்பா சம்மதிக்கவில்லை.

அவர்கள் அலுத்துப்போய், "உன் விலை என்னவோ அதை நீயே சொல்" என்றார்கள்.

"நான் வேண்டுவது என் சுதந்தரம். நாட்டியம் முடிந்தவுடனே எனக்குத் தோன்றிய இடத்துக்கு நான் போவேன்."

நாட்டியத்தின் அந்த விலை எல்லாருக்குமே ஆச்சரியமளித்தது.

"திக்விஜயியான அரசனின் அருள் விழியை உதறித் தள்ளிவிட்டு, இந்த வேசி வேறிடம் செல்வாளாம்! இவளுக்கு ஒருவேளை ஏதாவது பைத்தியம் கியித்தியம் இருக்குமோ?" என்று அவர்கள் நினைத்தார்கள்.

பார்த்துக்கொண்டே இருக்கையில் நாட்டியத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் முடிந்தன. புஷ்பாவின் குரலில் குயிலின் இனிமை இருந்தது போலவே அவளுடைய அபிநயத்திலும் புருவின் லாகவம் இருந்தது. ஒவ்வொரு கணமும் அவளுடைய மேனிக் கொடி ரத்தினக் கம்பளத்தின்மீது வளைந்தது. நட்சத்திரங்கள் நிரம்பிய ஆகாயத்தில் ஒரு கணம் இங்கும், மறுகணம் அங்கும் மின்னியோடும் மின்னற் கொடி போல அவள் தோன்றினாள். காற்றின் மந்தமான அலையினால் அசையும் கொடியையொத்த அவளுடைய அபிநயம் அரசன் மனத்தைக் கவர்ந்தது. அவளுடைய ஒவ்வோர் அங்க அசைவோடு கூடவே, பார்ப்பவர்கள்மீது நறுமண மலர்கள் தூவினாற் போலத் தோற்றியது. பாஷாணவர்மாவோ முற்றும் மோகித்துப் போய்விட்டான்.

புஷ்பா அன்று தன் திறமை முழுவதையும் காட்டினாள். அவளுடைய மதுர ஆலாபனத்தி லிருந்து நிலவு பொழிந்தது. ஆகவே அவளுடைய மோகன நாட்டியம், 'நிலவில் உட்கார்ந்து ஸரஸ்வதியே வீணை வாசிக்கிறாளோ?' என்று தோற்றும்படி செய்ததில் வியப்பு என்ன?

அவளுடைய பாடல்களின் கருத்தை மட்டும் யாருமே கவனிக்கவில்லை. அவள் பாடிய பாட்டு ஒன்றில், நள்ளிரவில் படுக்கையில் புரண்டுகொண் டிருந்த ஒரு ராஜகுமாரனின் இருதயத் தவிப்பு வர்ணித்திருந்தது. அந்த ராஜகுமாரன் அநேகமாகப் புத்தனாகத்தான் இருக்க வேண்டும் என்று தோன் றிற்று. அவன் உள்ளம் கூறியது:

"நான் இங்கே மஞ்சத்தில் படுத்திருக்கிறேன். ஆனால் வெளியே?

"வெளியே அநாதைகளும் முடங்களுமான ஏழை ஜனங்கள் ஈரத் தரையில் கைகால்களை ஒடுக்கி ஒன்றாகக் கூட்டிக்கொண்டு படுத்திருக்கிறார்கள்.

"நான் சற்றுநேரம் முன்பு பசியில்லாமல் பொற் தட்டிலிருந்த பரமான்னங்களையெல்லாம் எச்சிற் படுத்திவிட்டு வந்தேன். ஆனால் வெளியே?

"வெளியே தெருவில் விழுந்த உலர்ந்த ரொட்டித் துண்டுகளைத் தின்றும் பசியடங்காமல் ஏழைகளின் குழந்தைகள் அழுது அழுது, சற்றுநேரம் முன்புதான் தூங்கின.

"மஞ்சத்தில் படுத்திருக்கும் என் மனைவியின் மேனியிலுள்ள ரத்தினங்கள் விளக்கொளியில் பளபளவென்று ஜ்வலிக்கின்றன. ஆனால் வெளியே?

"வெளியே எண்ணற்ற தாய்மார்களும் சகோதரி

மார்களும் பத்தினிமார்களும் கன்னிமார்களும் இப்போது துடிதுடித்துக் கொண்டிருப்பார்கள். கன்னங்களில் வழிந்தோடும் கண்ணீர்தான் அவர்களுக்கு அலங்காரம்.

''எனக்குத் தூக்கம் வரவில்லை. 'எப்போது இரவு கழியும்? அழகிய வைகறை எப்போது தோன்றும்?' என்று தோன்றுகிறது. ஆனால் வெளியே?

''வெளியே உள்ள ஏழை எளியவர்களுக்கும் அநாதை முடங்களுக்கும் இவ்விதமே தோன்றுமா? எனக்கு உஷைவேளை கல்யாணத்தில் லாஜஹோமம் போலத் தோன்றுகிறது. ஆனால் அவர்களுக்கோ?- பலி பசுவுக்கு யாகஹோமம் எப்போதாவது பிடிக்குமா? உஷை வேளை என்றால், அவர்களுக்குக் கடுமையான ஒரு புதிய நாள்! அது விடிவதைக் காட்டிலும் இந்த இரவே காலராத்திரியாக மாறிவிடுவது மேல் என்று அவர்களுக்குத் தோன்றும்.''

இமயமலையில் மரங்களின் நிழலில் உலாவுகிறவனுக்கு நடுப் பகலின் சூரிய கிரணங்களும் சந்திர கிரணங்களெனத் தோற்றும். அது போலவே, புஷ்பாவின் பாடல்களிலிருந்த இனிமையில், அவற்றிலிருந்த உக்கிரமான சிந்தனைகளை யாரும் அறியவில்லை.

பாடல் முடிந்தது; ஆடலும் முடிவதற்கு வந்தது. நர்த்தகியின் சிலம்புகளிலிருந்து அப்போது, 'நமோ புத்தாய, நமோ புத்தாய' என்ற குரல்கள் வெளிவருவது தெளிவாகக் காதில் விழுந்தது.

'எதிரிக் கட்சியைச் சேர்ந்த இந்த வேசி வேண்டுமென்றே பலர் முன்னிலையில் நம் மகாராஜாவை அவமானப்படுத்துகிறாள்' என்று சேனைத் தலைவர்கள் கருதினார்கள். அவர்களில் இரண்டொருவர் கத்தியை

எடுக்க உறையில் கையை வைத்து, எழுந்தும் நின்றார்கள். ஆனால் நாட்டியத்தில் லயித்திருந்த அரசனைக் கண்டதுமே, புஷ்பாவை அதட்டும் தைரியம் அவர்களுக்கு உண்டாகவில்லை.

நாட்டியம் முடிந்தது. வெற்றிலை பாக்குக் கொடுக்கும் போது, புஷ்பா அத்தர் பூசிக்கொள்ளச் சம்மதிக்கவில்லை. அரசனுக்கு அது ஆச்சரியமாக இருந்தது: வேசிக்கு நறுமணத்தில் வெறுப்பா!

"நர்த்தகி, உனக்கு ஏன் நறுமணம் பிடிக்கவில்லை?" என்று அரசன் கேட்டான்.

"பிடிக்காமலென்ன அரசே? எனக்கு மலர்கள் கொடுங்கள். அவற்றுக்கு வாசனை இல்லாவிட்டாலும், நான் அவற்றை ஆனந்தத்தோடு வாங்கிக் கொள்வேன்."

"போர்க்களத்தில் மலர்கள் எங்கிருந்து வரும்? இந்த வேசி அரசனின் வல்லமையைச் சோதிக்கிறாள் போலிருக்கிறது!" என்று யாவரும் எண்ணினார்கள்.

அரசன் நகைத்தவாறே, "நர்த்தகி, அத்தரையும் பூக்களிலிருந்துதான் இறக்குகிறார்கள்!" என்றான்.

"ஆமாம் அரசே! ஆனால் அத்தரென்பது பூக்களின் ரத்தம்! எனக்கு ஜீவனோடு உள்ள நறுமணம் வேண்டும். பிறரின் உயிரை வாங்கிக் கிடைக்கும் ஆனந்தத்தைப்பற்றி என்னைப் போன்ற நர்த்தகிக்கு எங்கிருந்து தெரியப்போகிறது?"

அரசனுடைய கண்கள் செவ்வாய்க் கிரகத்தைப் போல் சுடர் விட்டன. இப்பொழுதே நர்த்தகியின் சிரத்தைக் கொய்ய அரசன் உத்தரவிடப் போகிறான் என்றே எல்லாருக்கும் தோன்றிற்று. அரசன் கண் கொட்டாமல் அவள் முகத்தை உற்றுப் பார்த்தான்.

ஒரு க்ஷணத்தில் செவ்வாய் வெள்ளியாக மாறியது.

நர்த்தகி வெளியே சென்ருள். அரசன் மஞ்சத்தில் படுத்ததும் அன்று நடந்த யுத்தத்தைப்பற்றிச் சிந்திக்கலாஞன். அடிக்கடி அவன் சிந்தனைகளின் கோவை கலைந்தது. "ஏன் அப்படி ஆகவேண்டும்?" என்று நினைத்து அவன் வெளியே வந்தான்.

எதிரே இருந்த குன்றின் மறைவிலிருந்து அப்போதுதான் சந்திரன் மேலே வந்துகொண்டிருந்தான். வெளியே இருளுக்கு ஒளி கிடைத்துக்கொண்டிருந்தது. ஆனல் அரசனுடைய மனத்திலோ? --மறுநாளைய யுத்தத்தைக் காட்டிலும், சற்று நேரத்துக்கு முந்திய நர்த்தகிதான் அவன் மனக்கோயிலில் கூத்தாடிக் கொண்டிருந்தாள்.

அவன் நர்த்தகியை அழைத்துவர ஆள் அனுப்பிஞன். ஆனல் அவள் அங்கு எங்கே இருக்கிருள்? கூடாரத்தை விட்டு வெளியில் வந்ததுமே, அவள் யாரிடமும் ஒரு சொல்லும் பேசாமல் நடந்து விட்டாள்.

பாஷாணவர்மா படுக்கையில் தவியாகத் தவித்துக் கொண்டிருந்தான். ஒவ்வொரு நாளும் இரவில் வெற்றி மங்கை இனிய கீதங்கள் பாட, அவன் தூங்குவது வழக்கம். ஆனல் அன்று அவள் ஊமையாய் இருந்தாள். ஊமையா? சே! அந்த நர்த்தகிக்கு அடிமையாகி, அவளும் தன் கூடாரத்தை விட்டுப் போய்விட்டதாக அவன் கருதிஞன். ஒரு பக்கத்திலிருந்து இன்ெனரு பக்கமாகத் திரும்பும்போது தலைமாட்டிலிருந்த கத்தி உறையின்மீது அவன் கை பட்டது. உடனே அது 'ஜண்' என்று ஒலித்தது! அதே நிமிஷத்தில், நாட்டியம் முடிந்த தருணத்தில் சிலம்புகளிலிருந்து வெளி

வந்த "நமோ புத்தாய, நமோ புத்தாய" என்று சொற்கள் அவன் காதில் சுழன்றன.

வேக்காடு அதிகமுண்டானால் மழை பெய்கிறதல்லவா? அதுபோல் மனப்புழுக்கம் தாங்காமல் எங்கே தன் கண்ணிலிருந்து நீர் வடியுமோ என்ற பயம் அரசனுக்கு உண்டாயிற்று. உடனே அன்று மாலையில் தான் சொன்ன, "கண்ணீர் பலவீனர்களின் கண்ணுக்குத்தான் அழகு!" என்ற வாக்கியம் அவன் நினைவுக்கு வந்தது.

'நாட்டியத்தில் மிருதுவாகிவிட்ட மனத்தை மீண்டும் கடுமையாக்கவேண்டும். அதற்கு ஒரே வழிதான் உண்டு. உடனே அடுத்த கணத்தில், இந்த நள்ளிருளில் ரணகளத்துக்குப் போவதுதான் அந்த வழி. அந்தப் பிரேதக் குவியல்களுக்குள் நர்த்தகியின் அழகிய உருவத்தைப் புதைத்துவிட வேண்டும். நரிகள் பிணங்களைக் கிழிக்கும்போது உண்டாகும் பயங்கர ஒலி காதில் விழுந்தாலே இனிய சிலம்போசை தானே மறைந்துபோகும்' என்று நினைத்து, அவன் நிலவொளியைப் பார்க்காமல் மரங்களின் கீழே படர்ந்திருந்த இருளைப் பார்த்துக்கொண்டே தன்னந்தனியனாய்ச் செருக்களத்தின் அருகே சென்றான்.

அவன் காலடிச் சப்தத்தைக் கேட்டு ஒரு நரி திபுதிபுவென்று ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிக்கு ஓடியது. தன் மனத்திலிருந்த பலவீனமான எண்ணமும் அவ்வாறே ஓடுவதுபோன்ற உணர்ச்சி அவனுக்கு உண்டாயிற்று.

ஆழமான கிணற்றிலிருந்து வருவதுபோல், எங்கிருந்தோ, "தண்ணீர்! தண்ணீர்" என்ற குரல் வந்து காதில் விழுந்தது.

கடுமையாகிக்கொண்டிருந்த அரசனின் மனம், "திக்விஜயம் செய்த மகாராஜாவிடம் கத்தியிலிருந்து ஒழுகும் ரத்தநீர் மட்டுமே இருக்கும்!" என்றது.

குரல் வந்த பக்கமாகத் திரும்பிப் பார்த்தான் அரசன். ஒரு மனித உருவம் அவசர அவசரமாக அங்கே போய்க்கொண் டிருந்தது. 'இது யாருடா இது நடுநிசியில்? பேயா, பிசாசா?' என்று எண்ணி அவன் பின்னும் சற்றுத் தூரம் சென்ருன்.

அவள் ஒரு பெண்! அவளுடைய அவசர நடையி லும் ஒரு தாளக்கட்டு அமைந்திருந்தது. போரில் மடிந்த தன் கணவனைத் தேடுவதற்காக அவள் அநேக மாக நகரத்திலிருந்து வந்தவளாக இருக்கவேண்டும்.

அரசனின் ஆவல் அவனைச் சும்மா இருக்கவிட வில்லை. சத்தம் செய்யாமல் அவன் அந்தப் பெண்மணி யின் பின்னலேயே போனன். உற்றுப் பார்த்தான். அவள் கையில் அது என்ன? கணவன் அவளுக்குத் தந்த காதற் பரிசாய் இருக்குமா?

"தண்ணீர்! தண்ணீர்!" என்ற குரல் புறப்பட்ட இடத்தில் அவள் நின்ருள்; குனிந்து பார்த்தாள். கண நேரத்தில் தலை நிமிர்ந்தாள். முன்ருனையால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். பிறகு கீழே உட்கார்ந்து இடதுகையில் இருந்த பாத்திரத்திலிருந்து கொஞ்சங் கொஞ்சமாகத் தண்ணீரை எடுத்து, ஒவ் வொரு வாயாக, வேட்கையால் வாடியவனுடைய வாயில் ஊற்றினள்.

அவள் முகத்தைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலை அரசனல் தாங்க முடியவில்லை. அவன் சட் டென்று முன்னே வந்தான்.

அரசன் திடுக்கிட்டுப் பார்த்தான்.

"புஷ்பா!" என்று அவன் கூச்சலிட்டான்

அவளோ வெறுப்போடு முகத்தைத் திருப்பிக் கொண்டு, "ஹூம்! இது அசல் ஓநாய்! இங்கே எதுக்கு வந்தது?" என்றாள்.

அவள் பேச்சைக் கேட்டு அரசனுக்குக் கோபம் வந்தது. ஆனால் அவன் அந்தக் காயமுற்றவனைச் சுட்டிக்காட்டி, "இவன் உனக்கு யார்?" என்று கேட்டான்.

"எனக்கா? அண்ணன்."

"அண்ணனா?"

"ஆமாம். நீங்களும் எனக்கு அண்ணனே. ஒரே கடவுள் எல்லாரையும் படைத்திருக்கிறார். ஆனால் எல்லா அண்ணன்மார்களும் ஒரே விதமாக இருக்கிறார்களா? அப்படி இருப்பதேது?—"

அரசன் ஸ்தம்பித்து நின்றான். ஆனால் அவள் கூறிய 'ஓநாய்' என்ற சொல் அவன் உள்ளத்தைச் சூல் கொண்டு குத்தியது.

அவன், "உன்னைப்போன்ற வேசி இந்த நேரத்தில் அழகான படுக்கையறையில் அல்லவா இருக்க வேண்டும்? இங்கே இந்த நரகத்தில் எதற்காக இருக்கிறாய்?" என்றான்.

புஷ்பா நகைத்து, "இது நரகமா? அப்படியானால் இந்த நரகத்தை உண்டாக்கியது யார்?" என்று கேட்டாள்.

அவள் கேள்வி அரசனின் மனத்தில் வாள்வீச்சுப் போல் பாய்ந்தது. ஆனால், பேச்சுப் போரில் இந்த எதிரியைத் தோற்கடிப்பது எளிதன்று என்பதைப் பாஷாணவர்மா தெரிந்துகொண்டான். அவன் மெதுவான குரலில், "நர்த்தகி! காதலனுக்கு மதுக் கிண்

ணத்தை நிரப்பித் தரும் இந்த வேளையில்—'' என்று ஆரம்பித்தான்.

தாகம் தணிந்ததால் நன்றி தெரிவிக்கும் பார்வையோடு தன்னைப் பார்த்துக்கொண்டிருந்த அந்தக் காயமுற்றவர்களைச் சுட்டிக் காட்டி, ''இந்த நிமிஷத்தில் இவன்தான் என் காதலன்'' என்று சொல்லி, புஷ்பா தன் கையிலிருந்த தண்ணீர்ப் பாத்திரத்தை மேலே தூக்கி, ''இதைப் பார்த்தீர்களா? இதுதான் மதுக் கிண்ணம்'' என்றாள்.

தன் காலால் ஓர் உதை கொடுத்து அவள் கையிலிருந்த பாத்திரத்தை உயரப் பறக்கடிக்க வேண்டும் என்ற எண்ணம் அரசனின் மனத்தை எட்டிப் பார்த்தது. ஆனால் அது ஒரு க்ஷணந்தான். அவன் புஷ்பாவைத் தூண்டுவதற்காக, ''நர்த்தகி, சயனகிருகத்து மலர் மாலைகளின் நறுமணம் எங்கே! பிணங்களின் இந்தத் துர்நாற்றம் எங்கே!'' என்றான்.

புஷ்பா, போர்க்களத்தில் பரவியிருந்த பிணக் குவியல்களை ஒரு முறை பார்த்துவிட்டு, ''அரசே, இந்தப் பிணங்களுங்கூட மலர்களே. இவை பூமித்தாயின் மலர்கள். இவற்றை இப்படிக் கசக்கி எறிந்த ராக்ஷஸனை நீங்கள் தண்டிப்பீர்களா?'' என்று கேட்டாள்.

சந்திரனை மேகங்கள் மறைத்தன. அரசனின் முகத்தில் விசித்திரமான சிந்தனைகளின் நிழல் தென்பட்டது. அரை க்ஷணத்துக்கெல்லாம் சந்திரன் சிரித்தான். அரசன் புஷ்பாவின் அருகில் வந்து, ''நர்த்தகி, நீ என் பட்டராணி ஆவாயா?'' என்று கேட்டான்.

புஷ்பாவிடம் இதற்குப் பதிலில்லை என்று நினைத்தான், அவள் முகத்தைக் கண்ட அரசன். பெண்மணியின் மனத்தின்மீது வெற்றி பெறுவது திக்விஜயத்

தைக் காட்டிலும் கடினம். அரசன் கர்வத்தோடு, "என்ன, உன் யோசனை?" என்று கேட்டான்.

புஷ்பாவின் கண் முன்பு அந்த நள்ளிருளுக்குப் பதிலாக மற்றோர் நள்ளிருள் வந்து நின்றது. போர்க்களம் கேளிகிருகமாக மாறியது. தாரகைகள் அத்தர் மணங்கொண்டு ஒளிரும் விளக்குகளாயின. எதிரே, சக்கரவர்த்தியான பாஷாணவர்மாவின் ஸ்தானத்தில் காவி வஸ்திரங்கள் அணிந்த ஓர் அழகிய இளைஞனை பௌத்தபிக்ஷு அவள் கண்ணுக்குத் தென்பட்டான். சரியாக நடுராத்திரியில் அவள் கபடமாக-மரணத் தறுவாயிலிருக்கும் ஒருவனுக்குத் தைரியம் கூறவேண்டும் என்று பொய்க்காரணம் சொல்லி-அவனைத் தன் வீட்டுக்கு வரவழைத்திருந்தாள். இளைப்பாற அவனை மஞ்சத்தில் உட்காரச்சொல்லி உபதேசம் கேட்பவள்போல அவன் கால்களைத் தீண்டினாள். அவளுடைய அந்த லாவண்யமென்ன, அந்த அலங்காரங்களென்ன,—கோடைக்காலத்திலும் இமய மலையில் அருவிகள் பாயாமலா இருக்கின்றன? பிக்ஷு அவளை உற்றுப் பார்த்தான்; சற்றுக் குலியவும் குனிந்தான். அதற்குள் அடுத்த அறையில் சுவாச நோயால் வருந்திய அவள் தாய் முனகிய சத்தம் கேட்டது. "என் நண்பன் அங்கே இருக்கிறானோ?" என்று சொல்லிக் கொண்டே அந்தப் பிக்ஷு அடுத்த அறைக்குப் பாய்ந்து சென்றான். நோயாளிக்கு லேசாக இருக்கும்படி அவள் உடலுக்கு ஆகாரம் கொடுத்து, இரவு முழுவதும் அவள் அருகிலேயே உட்கார்ந்திருந்தான். மறுநாள் காலையில் அவன் புறப்பட்டுப் போய்விட்டான். ஆனால் புஷ்பாவின் மனக்கோயிலிலிருந்து அவன் அகன்றானா? இல்லை! இந்தச் சம்பவம் நடந்து மூன்று வருஷங்கள்

ஆயின.

'புஷ்பாவின் மௌனம், அவள் என் கோரிக்கையை ஒப்புக்கொண்டதற்கு அடையாளம்' என்று நினைத்த அரசன், வெற்றி தொனிக்கும் குரலில், "அப்படியானால் நீ என் பட்டராணி ஆவதற்குத் தயார் தானே?" என்று கேட்டான்.

புஷ்பா சிரித்துக்கொண்டே, "ஒரு நிபந்தனையின் மேல்—" என்றாள்.

"சக்கரவர்த்திக்கு நிபந்தனையைப்பற்றி என்ன கவலை?"

"என் நிபந்தனை சாதாரணமானதே—"

"சாதாரணமானாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி; என் பின்னால் இவ்வளவு சேனை தண்டத்துக்கா இருக்கிறது?"

"ஆனால், உங்கள் உள்ளத்தில் என்ன இருக்கிறது?"

அரசனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவன் வருத்தமான குரலில், "என்ன உன் நிபந்தனை?" என்று கேட்டான்.

"நீங்கள் சந்நியாசம் வாங்கிக் கொள்ளுங்கள்; அதற்கு அப்புறம்........"

வேறோரிடத்திலிருந்து 'தண்ணீர், தண்ணீர்!' என்ற குரல் வந்தது. 'நமோ புத்தாய' என்று சொல்லிக்கொண்டே புஷ்பா அந்தப் புறமாகச் சென்றாள்.

கவி இறந்துபோன தன் நண்பனைத் தேட அதிகாலையில் போர்க்களத்துக்கு வந்தான். இரக்கம் கலந்த அழுகை ஒன்று திடீரென அவன் காதில் விழுந்தது. 'காயமடைந்தவரின் முனகலா இது? அல்லவே. யாரோ விக்கி விக்கி அழுகிறார்கள் போலிருக்கிறதே'

என்று நினைத்து, கவி மனம் பதற அங்கே ஓடினன். இரக்கத்துடன். "நீ யாரப்பா? என்ன நேர்ந்துவிட்டது உனக்கு?" என்று கேட்டான்.

அழுதுகொண்டிருந்தவன் கழுத்தைத் தூக்கியதுமே, மங்கிய நிலவிலே கவி பார்த்தான்: அவன் தான் ராஜாதிராஜன் பாஷாணவர்மா!

## பழைய பந்தல்

பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும், குஸுமா ஹார்மோனியப் பெட்டியை எடுத்து வைத்துக் கொண்டு பாடலானாள்.

"யமுனை நதிக்கரையில் கண்ணன் குழலூதுகிறான்"

பாட்டைக் கேட்டால் அலுப்புத் தீரும் என்பார்கள். ஆனால் பின்கட்டில் பழைய வெள்ளைப் புடைவையைப் போர்த்துக்கொண்டு படுத்திருந்த பாட்டிக்கு இது வேதனையாக இருந்தது. 'இந்தப் பெண் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தாலே, சனியன், இந்த லொட லொடப்புத்தான்! இதைக் கேட்பதைவிடப் புராணம் கேட்கப் போகலாமே?' என்று முணுமுணுத்துக் கொண்டே அவள் எழுந்து முன்கட்டுக்கு வந்தாள். அப்பொழுது கோபு, கையிலே வர்ணக் காகிதத்தில் அச்சிட்ட ஒரு விளம்பரத்தோடு, குதித்துக்கொண்டே வீட்டுக்குள் வந்தான். பாட்டியைப் பார்த்தவுடனே, "பாட்டி, பாட்டி! இன்றைக்கு ஜோரான சினிமா வந்திருக்கிறது!" என்று கூவினான். அவன் அப்படியே ஓடிப்போய்ப் பாட்டியின் காலைக் கட்டிக் கொள்வதாக இருந்தான்; ஆனால் அவளுடைய முகத்தைப் பார்த்ததும் அவனுடைய குழந்தையுள்ளம் திடுக்கிட்டது. "அக்கா, அக்கா!" என்று கூவிக்கொண்டே அவன் குஸுமாவிடம் ஓடினான்.

கோயிலுக்கு வெறுங் கையுடனா போவது? கோயிலில் வைத்திருக்கும் பானையில் போடக் கொஞ்சம் அரிசியாவது எடுத்துப் போகலாம் என்ற எண்ணத்தோடு பாட்டி சமையலறைக்குள் போனாள். ஒரு கிண்ணத்தில் அரிசியை எடுத்துக்கொண்டாள். "நான்

கோயிலுக்குப் போய்வருகிறேன்'' என்று அவள் மருமகளிடம் சொல்லத் திரும்புவதற்குள்ளே, "சற்று, இந்தக் குழந்தையை வைத்துக்கொள்ளுங்கள். ஓயாமல் சிணுங்கியபடியே இருக்கிறது. இன்றைக்குச் சமையலும் சீக்கிரம் ஆகவேண்டும். சினிமாவுக்கு—'' என்ற வார்த்தை அவள் காதில் விழுந்தது.

மாமியாரின் முகத்தைப் பார்த்ததுமே மருமகள் சட்டென்று வாயை மூடிக்கொண்டாள். 'நான் புராணம் கேட்பது நின்றுவிடுமே என்ற கவலை இந்த வீட்டில் யாருக்காவது இருக்கிறதா?' என்று பாட்டி நினைத்தாள். குழந்தை பலமாக அழுததையும் சட்டை செய்யாமலே வீட்டைவிட்டு வெளியே வந்தாள். முதல் நாள் காலட்சேபத்திலே கேட்ட ஒரு பாடலை அவள் வாய் முணுமுணுத்தது.

"கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டதல்லால் காதல்மற்று யாதுமில்லை.''

தெருவிலே குஸுமாவின் பாட்டு விளக்கமாகக் கேட்டது.

"யமுனை நதிக்கரையில் கண்ணன் குழலூதுகிருன்''

பாட்டி கழுத்தை வளைத்துத் தன் மங்கிய பார்வையால் அந்த வீட்டைப் பார்த்தாள். தான் ஒரு கரையிலும் வீட்டிலுள்ள மற்றவர்கள் யாவரும் மறு கரையிலும் இருப்பதாக அவளுக்குத் தோன்றிற்று. இந்த இரு கரைக்கும் நடுவே 'அகாதமான' ஆற்றின் நீல வெள்ளம் ஓடுகிறது. அவள் திரும்ப அக்கரைக்கு எப்படிப் போக முடியும்? மற்ற ஆறுகளுக்கு வாராவதி உண்டு; ஆனால் வாழ்க்கையாற்றுக்குப் பாலம் போடக் கடவுளால்கூட முடியாது.

பாட்டிக்குக் கிட்டத்தட்ட எழுபது வயது ஆகி விட்டது. தன் வாழ்க்கையில் அவள் பட்ட துன்பங் கள் யாவும் அவளுடைய சூன்ய மனத்தில் சுழன்று படிந்தன. உடல் தளர்ந்துவிட்டது. வீட்டு வேலை செய்ய முடிவதில்லை. மனமும் சோர்ந்துவிட்டது. ஒரு நாள் போவது ஒரு யுகம்போல இருந்தது. இரவிலே ஒரு தரம் தூக்கம் கலைந்தால் மறுபடி வருவதில்லை; ஆனால் இரவுப் பொழுதோ விரைவில் கழிவதில்லை. மகன், மருமகள், பேரன், பேத்திகள் ஆகியவர்களின் உலகம் தன் உலகத்தினின்றும் முற்றும் வேறுபட் டது என்று அவளுக்குச் சில நாளாகத் தோன்ற ஆரம் பித்திருக்கிறது. அவள் கண்ணைத் திறந்தபடியே இருட்டைப் பார்த்துக்கொண்டு படுக்கையில் உட் கார்ந்திருப்பாள்; அந்தச் சமயத்தில் வீட்டிலே மீதிப் பேர் எல்லாரும் இனிய தூக்கத்திலே ஆழ்ந்திருப் பார்கள். சாப்பாடு, துணிமணிகள், வேடிக்கை முத லிய எல்லா விஷயங்களிலும் வீட்டிலே ஓர் ஆச்சரிய கரமான மாறுதல் அவளுக்குத் தென்பட்டது.

அவள் புராணம் கேட்க வந்து உட்கார்ந்தாள். சாஸ்திரிகளின் வாக்குப் பிரவாகம் மடையெடுத்து ஓடியது. "இந்த உலகத்திலே யாரும் யாருக்கும் சொந்தமில்லை. ஆகையால் நாம் பிறந்த நிமிஷம் முதல் நம்மால் முடிந்தவரையில் ஆண்டவனைச் சிந்திப்பது நம்முடைய கடமை. ஈசுவரனுடைய நாமத்துக்கு உள்ள மகிமையை அளவிட்டுச் சொல்ல யாராலும் முடியாது..." வீட்டில் யாரோ நோயாளியாக இருந்த தனால் அவர் அன்று சற்றுச் சீக்கிரமே புராணத்தை முடித்துவிட்டார்.

பாட்டி மிகுந்த பக்தியோடு அவருடைய பிரவசனத்தைக் கேட்டாள். எதிரே கர்ப்பக்கிருகத்துள் இருந்த சங்கரலிங்கம் அவள் கண்ணுக்குத் தெரியவில்லை. ஆயினும் நடு நடுவே அவள் அந்தப் பக்கம் பார்த்துக் கைகூப்பினுள். ஆண்டவனுடைய தரிசனம் கிடைத்தால்தான் தன் மனத்துக்கு இனி அமைதி உண்டாகும் என்று அவளுக்குத் தோன்றிற்று. ஆனுல் ஆண்டவனுடைய தரிசனம் சொர்க்கத்திலே தானே கிடைக்கும்! சொர்க்கத்துக்குப் போவதென்ருல்—சாவைப்பற்றி எண்ணியதுமே அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. தன் மகன் சிறு வயதில் நோய்வாய்ப்பட்டிருந்த போது, "கடவுளே, என்னைக் கொண்டுபோ; இந்தக் குழந்தைக்கு உயிர்ப் பிச்சை கொடு!" என்று அவள் மிகவும் மகிழ்ச்சியோடு வேண்டிக்கொண்டது உண்டு. அதற்குப் பிறகு எத்தனையோ ஆண்டுகள் கடந்துபோயின என்பது உண்மை! ஆனுல் சாவைப்பற்றி நினைத்ததும், முன்னைக் காட்டிலும் இப்பொழுது உயிர் விடுவது அவளுக்குக் கஷ்டமாகத் தோன்றிற்று. 'நமக்குச் சாவே வேண்டாமே! ஆனுல் உயிரோடு இருந்து மட்டும் நாம் என்ன செய்துவிடப் போகிறேம்! நமக்கு இந்த உலகத்திலே என்ன வேலை இருக்கிறது?' இப்படி அவள் எண்ணினுள்.

புராணம் நடந்துகொண்டிருந்தபோதே அவள் ஒரு தரம் வெளிப்புறம் பார்த்தாள். மாலைக் கருநிழல் உலகத்தை இருட்டாக்கியது. மரத்திலிருந்து சருகுகள் உதிரும் ஓசை கேட்டது. கூட்டுக்குத் திரும்பும் காக்கைகளின் கூச்சல் ஓயாமல் காதில் விழுந்தது. பாட்டியின் மனத்தில் விசித்திரமான கருத்து உதித்

தது. 'மற்றப் பறவைகள் மட்டும் அமைதியாகக் கூட்டுக்குத் திரும்புகின்றன. ஆனால் இந்தக் காக்கை கள் கூச்சல் போடாமல் போவதில்லை.'

புராணம் முடிவதற்கு முன்பே இருள் கவிந்து கொண்டது. பாட்டி மெதுவாக எழுந்தாள். வழியில் அவள் கண்ணுக்கு ஒன்றுமே புலப்படவில்லை. ஆயி னும் சோர்ந்த மனநிலையிலே அந்த இருட்டில் நடந்து போவது அவளுக்கு ஓரளவு ஆறுதலாக இருந்தது.

வாசலில் அவளுடைய புதல்வர் நின்றிருந்தார்; "என்னம்மா, இவ்வளவு நேரம்! அதுவும் இந்த இருட் டிலே!" என்றார்.

பாட்டி ஏதும் பேசாமலே உள்ளே போனாள். 'கோயிலுக்கு ராந்தலை எடுத்துக்கொண்டு இவன் வந்திருந்தால், இவனுடைய அன்பை உண்மையென்று சொல்லலாம்' என்றது அவள் மனம். அவள் உள்ளே போய்ப் பார்த்தபோது சமையலறையில் கடை கட்டி யாகிவிட்டது. குஸுமாவும் கோபுவும் சினிமாவுக்குப் போகும் ஆனந்தத்தில் மூழ்கியிருந்தார்கள். பிள்ளை தன்னையும் வாவென்று கூப்பிடவேண்டும்; அப்பொ ழுது, "எனக்கோ கண் தெரிவதில்லை. ஏதுக்கடா பணத்தைக் கரியாக்குகிறாய்? நான் குழந்தையை வைத் துக்கொண்டு வீட்டைப் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் போய்ப் பார்த்து வந்தால் நான் பார்த்த மாதிரிதான்!" என்று பதில் சொல்ல வேண்டுமென்று பாட்டி நினைத்தாள்.

ஆனால் இதே விஷயத்தை மருமகள் சொன்ன போது அவளுக்குப் பிரமாதமான கோபம் வந்து விட்டது. கைக்குழந்தையை வீட்டிலே விட்டுச் சினி மாப் பார்க்கப் போகும் மருமகளுக்குச் சரியான புத்தி

புகட்டவேண்டும் என்று அவளுக்குத் தோன்றிற்று. ஆனால் மறுகணம், மாலை நேரத்திலே அவள் கண்ட காட்சியை நினைத்துக்கொண்டாள். அவள் ஆற்றின் ஒரு கரையிலே இருக்கிறாள்; மற்றவர்கள் யாவரும் மறுகரையில் இருக்கிறார்கள். இனி அவர்களுக்கும் அவளுக்கும் என்ன தொடர்பு? யார் என்ன வேண்டு மானாலும் செய்யட்டுமே!

அவள் பூசையறையில் கடவுளுக்கு முன்னால் போய் உட்கார்ந்தாள். நந்தாவிளக்கில் திரி கருக்காடி யிருந்ததை அவள் பார்த்தாள். சுடரைத் தட்டாமலே அவள் வெகுநேரம் அமைதியாக உட்கார்ந்திருந்தாள். பிறகு ஆண்டவன் முன்பு தலையைச் சாய்த்துத் தழு தழுத்த குரலில், "நாராயணா, இந்தப் பந்தத்திலிருந்து என்னை விடுவித்துவிடு, அப்பனே!" என்றாள். அவள் இப்படிச் சொல்லிவிட்டாள். ஆனால் இந்தப் பந்தத்தி லிருந்து விடுபட மரணத்தைத் தவிர வேறு வழியே இல்லை என்பது கவனத்துக்கு வந்ததுமே, அவளுக்கு என்னவோபோல இருந்தது. ஆனால் அவள் திரும்பி மறுகரைக்கு எப்படிப் போக முடியும்? நடுவிலே ஆழ மான வெள்ளம் ஓடுகிறதே!

பலகாரம் செய்வதற்காக அவள் பூசையறையி லிருந்து வெளிவந்ததும், வீட்டிலே இருந்த மற்றோர் உலகத்தின் மாறுதல் அவளுக்குத் தெளிவாகப் புலப் பட்டது. வெள்ளைப் புடைவையைத் தவிர்த்து வேறு துணி அவள் உடம்பிலே பட்டுப் பல வருஷங்களாகி விட்டன. சினிமாவுக்குப் போவதற்குச் சிங்காரித்துக் கொண்டு வந்த குஸுமாவை அவள் பார்த்தாள். ரோஜாநிறப் புதுப்புடைவை, அதே நிறத்தில் பிளவுஸ், வட்டமான கூந்தற்கட்டு, இடதுகை மணிக்கட்டிலே

பொன் கைக்கடிகாரம்!—நல்ல வேளையாக, அவள் முகத்திலே அப்பிக்கொண்டிருந்த பவுடர் பாட்டியின் கண்ணுக்குத் தென்படவில்லை. ஆனால், அவள் தண்ணீர் குடிப்பதற்காகப் பாட்டியைத் தாண்டிச் சென்றபோது, ஏதோ ஒரு ஸெண்டின் தீவிர நெடி பாட்டியின் மூக்கிலே அடித்தது. பாட்டி மூக்கை அழுத்தி மூடிக்கொண்டாள்.

சற்று நேரத்துக்கெல்லாம் குஸுமாவின் தாயும் அலங்காரம் செய்துகொண்டு வெளியே வந்தாள். 'அந்தப் பெண்ணுக்குத் தாய்தானே இவள்!' என்று பாட்டி மனத்துக்குள் சொல்லிக்கொண்டாள். மூன்று குழந்தைகளுக்குத் தாயான பிறகு அவள் நிலைக் கண்ணாடியிலே அழகு பார்த்துத் தலை பின்னிக்கொள் கொள்வது, பாட்டிக்கு அடியோடு பிடிக்கவில்லை. இம்மாதிரி உலகத்திலிருந்து தான் கொஞ்சங் கொஞ்சமாக விலகிக்கொண்டே போவது ஒரு விதத்தில் நல்லதுதான் என்று பாட்டிக்குத் தோன்றிற்று.

ஆனால் குழந்தையைத் தொட்டிலிலே விட்டு, அவர்கள் எல்லாரும் வெளியே கிளம்பும்வரையில்தான் இந்த எண்ணம் நிலைத்திருந்தது. சிறிது நேரம் அவள் பூசையறையில் போய் உட்கார்ந்தாள். ஆனால் வீட்டிலே இருந்த நிச்சப்தமான அமைதி அவளை வாட்டியது. 'நாம் எப்பொழுதோ இந்த உலகத்தை விட்டுப் போயாகிவிட்டது. ஏதோ ஓர் ஆசைநூல் ஒட்டிக்கொண்டு இருந்ததனால் நாம் பிசாசாகியிருக் கிறோம். இந்தக் கணத்திலே இதோ ஆண்டவன் முன்னால் உட்கார்ந்திருப்பது நாமல்ல; நம்முடைய பிசாசு!' என்றுகூட அவளுக்குத் தோன்றிற்று.

இதை எண்ணியதும் அவளுடைய இருதயம் பட

படபடவென்று அடித்துக்கொண்டது. அவள் பூசையறையிலிருந்து வெளியே வந்து இந்த விளக்கைப் போடுவதும் அந்த விளக்கைப் போடுவதுமாகச் சும்மா வீடு முழுவதும் சுற்றி வந்தாள். சமையலறையில் மூலையிலே நாலைந்து கரும்புத் துண்டுகள் கிடப்பதை அவள் இயல்பாகப் பார்த்தாள். பக்கத்திலேயே அரிவாள்மணை இருந்தது. பாட்டிக்குக் கரும்பு தின்ன வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. மறுகணமே அவளுக்குச் சுய நினைவு வந்தது. பொக்கைவாய்க் கிழவி எப்படிக் கரும்பு தின்ன முடியும்? அரிவாள்மணையைப் பார்த்து, "கிடக்கட்டும் சனியன்!" என்று சொல்லிவிட்டு, அவள் சமையலறையிலிருந்து வெளியே வந்தாள்.

மருமகளின் அறைக்குள் போனதும் அவள் மனம் பட்டபாடு சொல்லும் தரமல்ல. கட்டிலிலே தொங்கிய மெல்லிய கொசுவலை, மேஜைமேல் வைத்திருந்த விலையுயர்ந்த ரேடியோப் பெட்டி, சுவரிலே மாட்டியிருந்த அழகிய படங்கள்—எல்லாம் ஒரே உல்லாச உலகந்தான்! தரையில் விழுந்திருந்த கைக்குட்டை பாட்டியின் காலிலே பட்டது. இந்தக் கைக்குட்டைக்கு இவ்வளவு வெண்மை எப்படி வந்தது! இதைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்துப் போட்டால் என்ன என்று அவ்வளவு கோபம் வந்தது பாட்டிக்கு. மருமகளின் இந்த ஒய்யார வாழ்க்கை பாட்டிக்குச் சகிக்கவில்லை.

குழந்தைகளின் அறைக்குப் போனதும் அவளுடைய எரிச்சல் அதிகமாகிவிட்டது. குஸுமாவின் மேஜைமேல் கொண்டையூசிகள் குவியலாகக் கிடந்தன. அருகிலே ஏதோ ஒரு புத்தகம் இருந்தது. பாட்டி அதை எடுத்துக் கண்ணருகே கொண்டுவந்து உற்றுப் பார்த்தாள். 'நாசமாய்ப்போக!' என்று சொல்

லிக்கொண்டே அவள் அதை விட்டெறிந்தாள். அது ஒரு சமூக நாவல். அதன் அட்டைப் படத்தில், ஓர் இளைஞன் குனிந்து தன் காதலியை முத்தமிட்டுக் கொண்டிருந்தான்!

கோட்டின் சட்டை ஆணியில் தொங்கியது. அதை மேலாகப் பார்த்துவிட்டு, அவனுடைய பலகை மேல் வைத்திருந்த புத்தகத்தைப் பாட்டி எடுத்தாள். விளக்கு வெளிச்சத்தில் போய் அதைப் பிரித்தாள். மிகவும் சிரமப்பட்டு இந்த வரிகளை மட்டும் படித்தாள்:

**தாத்தாவுடைய உச்சிக்குடுமி**
**புசுபுசுவென்று பறக்குது பார்!**
**வளைந்து நிற்கும் பாட்டியினுடைய**
**பொக்கைவாய்ச் சிரிப்பின் அழகைப்பார்!**

வெறுப்போடு அவள் அந்தப் புத்தகத்தைத் தூர எறிந்துவிட்டு, அவசரமாக வெளியே வந்து வாசற்கதவைத் திறந்தாள். வெளியே மையிருள் பரவியிருந்தது. வாசல் முற்றத்தில், பழையபந்தலில் ஏற்றிய மல்லிகைக் கொடி எங்கும் நறுமணத்தை வீசியது. ஆனால் பாட்டிக்கும் அந்த மணத்துக்கும் சம்பந்தமே இல்லை.

அவள் விளக்குகளையெல்லாம் அணைத்தாள்; மறுபடி பூசையறைக்குள் வந்து உட்கார்ந்தாள். அவள் உள்ளத்தில் கடுமையான வேதனை உண்டாயிற்று. அவள் யாருக்காக உயிர் வாழ்கிறாள் என்பதே அவளுக்கு விளங்கவில்லை. கடவுளின் முன்னால் தலையைச் சாய்த்து அவள் பேசாமல் படுத்திருந்தாள். மூடிய அவள் கண்முன்பு, அவளுடைய வாழ்க்கை முழுவதும் பறவையைப் போலப் பறந்து மறைந்தது.

அந்தப் பாதி மயக்கத்தில், 'இத்தனை வருஷங்கள் நாம் வாழ்ந்தோம்' என்பதே அவளுக்கு உண்மையாய்ப் படவில்லை. எதற்காக, யாருக்காகத் தன் உயிர் இந்த இளைத்த உடம்பிலே இன்னமும் ஒட்டிக்கொண்டிருக்கிறது என்பதை நினைக்க நினைக்க, அவள் மனம் சோர்ந்து போயிற்று. இந்தச் சோர்விஞல்தானே என்னவோ, அவள் கண் அயர்ந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் யாரோ கதவைத் தட்டினார்கள். தூக்கம் கலைந்ததனால் சிடுசிடுப்போடு பாட்டி கண்ணைத் திறந்தாள்.

நந்தாவிளக்கு அணைந்திருந்தது. இருட்டில் தடுமாறிக்கொண்டே வெளியே வந்து, அவள் மின்சார விளக்கைப் போட்டாள்; வாசற்கதவைத் திறந்தாள். சினிமாவுக்குப் போனவர்கள் திரும்பி வந்திருந்தார்கள்.

"குழந்தை எழுந்ததா என்ன?" என்று மருமகள் கேட்டாள். பாட்டி பேசவே இல்லை.

மருமகள் தொட்டிலினருகே சென்று, குழந்தையைத் தொட்டுப் பார்த்துக்கொண்டே, "அடியம்மா! குழந்தை சொட்டச் சொட்ட நனைந்திருக்கிறதே! அட என் ராஜா, இந்த ஈரத்திலேயாடா நீ தூங்கினாய்!" என்று கூறியவண்ணம் குழந்தையை எடுத்துத் துடைத்து, அன்போடு முத்தமிட்டாள்.

இதைப் பார்த்ததும், 'நான் சற்றுநேரம் முன்பு துணைக்காக வீடு முழுவதும் தேடினேனே. குழந்தையிடம் மட்டும் நான் போகவில்லை. வீட்டிலுள்ள மற்றவர்களின் உலகம் என் உலகத்தினின்றும் வேறுபட்டிருக்கலாம்; ஆனால் குழந்தையின் உலகம் வேறுபட்டதா?' என்று பாட்டிக்குத் தோன்றிற்று. அவள்

குழந்தையை எடுத்துக்கொள்ள முன்வந்தாள்; அதற்குள் மருமகள் கோபத்தோடு அதைத் தூக்கிக் கொண்டு தன் அறைக்குப் போய்விட்டாள்.

இருளடர்ந்த பூசையறைக்குள்ளே போய், பாட்டி கண்ணைத் துடைத்துக்கொண்டாள். குழந்தையோடு தானும் ஒட்டிக்கொள்ளலாம் என்று பாட்டி நினைத்தாள். ஆனால் அவளுக்குக் குழந்தையிடம் என்ன உரிமை இருக்கிறது? இப்பொழுது தாயின் அணைப்பிலே குழந்தை சிரித்துத் தூங்கிக்கொண்டிருக்கும். பாட்டிக்கோ இனி இரவு முழுவதும் தூக்கம் வரப் போவதில்லை.

தனிமை—எப்போதும் அழியாத தனிமை—இனி அவள் வாழ்க்கையிலே என்ன மகிழ்ச்சியை உண்டாக்கப் போகிறது!

நந்தாவிளக்கை ஏற்ற வேண்டுமென்று அவள் ஆயிரம் தடவை நினைத்தாள். ஆனால் அவளால் எழுந்திருக்கவே முடியவில்லை. 'ஆண்டவன் இருட்டில் தான் இருக்கட்டுமே' என்ற எண்ணம், அவளுடைய சிரத்தைக்குச் சிறிதும் பொருந்தாத எண்ணம், கணப்பொழுது தோன்றியது.

இதற்குள் குழந்தையின் அழுகை கேட்டது. அது பலமாக அழுதது. பாட்டி தன் இடத்தை விட்டு அசையவில்லை!

"பூசையறையிலே இருப்பார்!" என்று மருமகள் சொல்லிய வார்த்தை அவள் காதில் விழுந்தது.

பாட்டி அவசரமாக எழுந்து நந்தா விளக்கை ஏற்றினாள்.

குழந்தையை எடுத்துக்கொண்டு அதன் தாய் உள்ளே வந்தாள். அந்தக் குழந்தை "பா—பா—த்—தி'

என்று கூவிக்கொண்டு அவள்மேல் தாவியது.

"எழுந்ததுமே பாட்டி பாட்டி என்று உங்களிடம் வர அடம் பிடித்தான். எவ்வளவோ தட்டினேன். விளையாட்டுக் காட்டினேன். ஆனால் பாட்டி பாட்டி என்று புலம்பிக்கொண்டேயிருந்தான். உங்களுக்குச் சிரமமாக இருக்குமே என்று பார்த்தேன்...."

"சிரமம் என்னடி எனக்கு? இந்தக் கண்ணுன குழந்தையோடு கொஞ்ச என்ன சிரமம்?" என்று பாட்டி சிரித்துக்கொண்டே சொன்னாள்.

குழந்தையின் தாய் தூங்கப்போனாள். பாட்டி குழந்தைக்கு விளையாட்டுக் காட்ட வாசலுக்கு எடுத்து வந்தாள். "அதோ விளக்கு, விளக்கு!" என்று ஆகாயத்திலிருந்த நட்சத்திரங்களை அவனுக்குக் காட்டினாள். இப்போது அவள் மனத்தில் வேறு எண்ணம் தோன்றியது. முன் போலவே இப்போதும் பூமியில் இருள் சூழ்ந்துதான் இருந்தது. ஆனால் ஆகாயத்தில் தாரகைகள் மினுமினுத்தன. காற்றலையோடு மல்லிகை மலரின் மணமும் வீசியது. அந்தப் பழைய பந்தலின் வாழ்க்கை - தரையிலே ஊன்றிக்கொண்டு அது நிற்பது - மல்லிகையின் இந்த இனிய மணத்துக்காகத்தான் என்பதை உணர்ந்ததும் பாட்டியின் மனம் அமைதியடைந்தது.

மகிழ்வுற்ற அவள் மனம், "ஆண்டவனின் வீட்டிலிருந்து சமீபகாலத்தில் வந்த உயிரும், ஆண்டவனின் வீட்டுக்கு விரைவிலே செல்லப்போகிற உயிரும் உறவு கொண்டாடுவதில் என்ன தடை இருக்கிறது?" என்று பேசியது.

தாய் சொல்லவே, குஸுமா குழந்தையைத் திரும்பி எடுத்துக்கொண்டு போக வந்தாள்.

"யமுனை நதிக்கரையில் கண்ணன் குழலூதுகிறான்" என்று முணுமுணுத்துக்கொண்டே அவள் வந்தாள்.

அவள் முணுமுணுத்த அந்தப் பாட்டைக் கேட்டு, குழந்தையைப் போலவே பாட்டிக்கும் புகலரிய ஆனந்தம் உண்டாயிற்று.

## வாழும் சிற்பம்

அது ஒரு பட்டிக்காடு. அந்த ஊர்ப் பையன்கள் யானையைக்கூடப் பார்த்ததில்லை. அந்த ஊர் ஜமீன் தாரின் மகன் அஜயன் சிற்பக்கலை பயிலப் பட்டணத் துக்குப் போயிருந்தான். அங்கே பணக்கார வீட்டுப் பெண்கள் உதட்டுக்கு வர்ணம் பூசிக்கொள்வதை அவன் யாரிடமோ சொன்னான். பெண்களின் குளக் கரைப் பேச்சிலே இந்தச் செய்தி எப்படியோ பரவி யது. அவர்களுக்கு இது வேடிக்கையாக இருந்தது.

அஜயன் சிற்பியாகி ஊரிலே வந்து வாழ்ந்தான். ஆனால் தன் கலையில் அவனுக்கு ஊக்கம் உண்டாக வில்லை. "இந்தப் பட்டிக்காட்டிலே, சிலை செய்யும்படி யான அழகு யாருக்கு இருக்கிறது?" என்று அவன் தன் நண்பர்களைக் கேட்டான். பணக்காரர்களுடைய கேள்விகளுக்குப் பெரும்பாலும் பதிலே சொல்லக் கூடாது; அப்படியாகச் சொன்னாலும் அது அவர்களு டைய மனசுக்குப் பிடித்தமான பதிலாக இருக்க வண்டும். கடைசியில் ஒரு நண்பன் துணிச்சலோடு, "உன் தாய்க்குத்தான் ஒரு சிலை செய்து வையேன்!" என்று அஜயனிடம் சொன்னான்.

அஜயன் புருவத்தை நெறித்தான். அந்த நண்பன் தன்னைப் பரிகாசம் செய்ததாக அவனுக்குத் தோன் றிற்று. சுக்காக உலர்ந்து போய், முகத்திலே சுருக்கம் விழுந்து, பஞ்சுபோல் தலைநரைத்த கிழவி அவன் தாய். "என் தாயைவிட உன் கொள்ளுத்தாத்தாவுக்குச் சிலை செய்து வைத்தால் வெகு அழகாக இருக்குமே!" என்று அவன் கோபத்தோடு நண்பனுக்குப் பதில் சொன்னான்.

பட்டிக்காட்டுத் தெருவில் பல குழந்தைகள் எப்பொதும் விளையாடும். கன்னங்கரிய உடல்; ஆனால் பளிச்சென்ற கண்கள்! அஜயன் அவர்களை வெறுப்போடு பார்ப்பான். இடுப்பில் குடத்தை வைத்துக் கொண்டு குளத்திலிருந்து ஆடி அசைந்து வரும் இளம் பெண்கள் அவன் கண்ணுக்குக் குரூபமாகத் தோன்றினார்கள். அந்தப் பட்டிக்காட்டில் அவனுக்கு எங்குமே அழகு தென்படவில்லை. அவனுடைய சிற்பக்கலை பேசாமடந்தையாகவே கிடந்தது.

ஒரு நாள் அந்த ஊரில் ஆனந்தம் அலையலையாகப் பொங்கியது. அன்று தேர் இல்லை; திருநாள் இல்லை; கல்யாணமும் இல்லை, கார்த்திகையும் இல்லை. கிராமச் சாவடியில் எவனோ ஒரு வழிப்போக்கன் வந்து தங்கினான். அவனிடம் நிறையப் பொம்மைகள் இருந்தன. சாவடியருகில் விளையாடிய குழந்தைகளைக் கூப்பிட்டு அவர்களுக்கு அந்தப் பொம்மைகளைக் கொடுத்தான். அந்தக் குழந்தைகள் வேறு குழந்தைகளை அழைத்து வந்தார்கள். அவர்களுக்கும் பொம்மைகள் கிடைத்தன. இப்படி இந்தச் சிறுவர்களின் மூலமாக ஊரிலே ஒரு நல்ல மனுஷன் வந்திருக்கிற செய்தி வீட்டுக்கு வீடு பரவியது. கிழவர்கள் தங்கள் சம்புடத்தைக்கூட மூடாமல் அவனைப் பார்க்க ஓடிவந்தார்கள். தண்ணீர் மொள்ளப்போன பெண்களுக்கு வழியிலேயே இந்தச் செய்தி கிடைத்தது. அவர்கள் தண்ணீர்க் குடத்தோடு நேராகச் சாவடிப்பக்கம் வந்தார்கள். பூக்கள் குலுங்கும் கொடியைச் சுற்றிப் பொன்வண்டுகள் வட்டமிடுவதுபோல, குழந்தைகள் அந்த வழிப்போக்கனைச் சூழ்ந்து கொண்டார்கள். "குழந்தையைக் கொண்டாடுகிற நீதான் அப்பனே உண்மையான

தெய்வம்!" என்றார் ஒரு தாத்தா. "தாயினுடைய இந்த அன்பு உனக்கு எப்படியப்பா வந்தது!" என்று தாய்மார்கள் வியந்தார்கள். "இல்லாவிட்டால் நம் ஊரிலும் ஒருத்தன் இருக்கிறானே – அந்த அஜயன்!" என்று ஓர் இளைஞன் விமரிசனம் செய்தான்.

இந்த விமரிசனம் அஜயனுடைய காதுக்கு எட்டியது. அவனுக்கு ஒரே எரிச்சலாக வந்தது. அந்த வழிப்போக்கன் இரண்டொரு நாளில் போய்விடுவான் என்று நினைத்து அவன் சும்மா இருந்தான். ஆனால் அவன் போகவில்லை. அவனுடைய பெருமை மேன் மேலும் வளர்ந்தது. கிராமத்துச் சிறுவர்கள் வீட்டிலுள்ள கந்தைத் துணிகளை அவனிடம் கொண்டு போய்க் கொடுப்பார்கள். அவன் அவற்றை ஒரு நிமிஷத்தில் அழகிய பொம்மையாக்கி அவர்களிடம் கொடுப்பான். அவனிடம் பொம்மை வாங்கிக்கொள்ளாமல் ஒரு குழந்தையாவது ஒருபோதும் திரும்பிப் போனதில்லை. அவனிடம் புதிய புதிய பொம்மைகள் கிடைத்தன; அதனால் குழந்தைகள் ஆனந்தமாக இருந்தார்கள். குழந்தைகளின் இன்பத்தைக் கண்டு தாய் ஆனந்தமடைந்தாள்; தாய்மாரின் சிரித்த முகத்தைக் கண்டு வீடு ஆனந்தமாக இருந்தது. இப்படி அந்த ஊரிலே எங்கே பார்த்தாலும் ஆனந்தமாக இருந்தது.

இதைப் பார்த்ததும் அஜயனுடைய முகம் கறுத்தது. அவன் எப்போதும் சிடுசிடுத்தான். 'நான் இந்த ஊரிலே பெரிய ஜமீன்தார்; இவ்வளவு பெரிய சிற்பக் கலையைக் கற்றுத் தேர்ந்த மேதாவி! இந்த ஊர் முழுவதும் என்னை லட்சியம் செய்யாமல் அந்தத் தரித்திரப் பயலைப் புகழ்கிறதே!' என்று எண்ணினான். அவன் உடல் முழுவதும் பொறாமைத்தீப் பற்றி

எரிந்தது. அவன் நேராகச் சாவடிக்குப் போனான். தெய்வத்தை வலம் வருவதுபோல, அந்த வழிப்போக்கனைச் சுற்றிக் குழந்தைகள் வட்டமிட்டன. ஒரு பொம்மையைச் செய்துகொண்டே அவன் தலை நிமிர்ந்து பார்த்தபோது, எதிரே அஜயன் நின்றான். "வாருங்கள் ஐயா, உங்கள் குழந்தைக்கு ஒரு பொம்மை கொடுக்கட்டுமா?" என்று வழிப்போக்கன் அவனை வரவேற்றான்.

"நான் யார், தெரியுமா?"

"பேஷாகத் தெரியுமே!"

"யார்?"

"தோட்டக்காரன்."

இந்த அவமானத்துக்கு அங்கேயே பழி தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று அஜயன் தீர்மானித்தான். அவனுடைய உக்கிர சொரூபத்தைக் கண்ட வழிப்போக்கன், "நான் சொல்வதற்குக் கோபித்துக்கொள்ளாதீர்கள், ஐயா! இப்படி நடந்தும் பேசியும் வளரும் பூக்கள் உங்கள் வீட்டிலும் இருக்குமே என்று சொன்னேன்" என்றான்.

"நான் ஒரு பெரிய சிற்பி; தெரியுமா?"

வழிப்போக்கனுடைய பெயர் விநயன். விநயன் ஆச்சரியத்தோடு அஜயனைப் பார்த்தான்; உங்களுடைய சிற்பங்களை நான் பார்க்கலாமா?" என்று கேட்டான்.

அஜயன் இடிபோன்ற குரலில், "இந்த நிமிஷமே நீ இந்த ஊரைவிட்டு ஓடிப்போ!" என்று கர்ஜித்தான்.

'ஏன்?"

"எங்களூர்க் குழந்தைகளின் கையில் இப்படிப் பட்ட தரித்திரப் பொம்மைகளைப் பார்க்க எனக்குச் சகிக்கவில்லை."

"உங்களுடைய சிற்பங்களை இந்தக் குழந்தைகளுக்கு நீங்கள் காட்டியிருந்தால் இவர்கள் இந்தப் பொம்மைகளைச் சீந்தவே மாட்டார்களே" என்று விநயன் பதில் சொன்னான்.

எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்ததுபோலப் பற்றி எரியும் உள்ளத்தோடு அஜயன் வீட்டுக்குப் போனான். தன் உருவத்தையே ஒரு சிலையாக்குவதென்று அவன் தீர்மானித்தான். அஜயன் ஓர் அழகிய அற்புதமான சிலையைச் சிருஷ்டிக்கும் செய்தி ஊர் முழுவதும் பரவியது. ஜனங்கள் இதைப் பார்க்க ஆவலோடு இருந்தார்கள். விநயனும் சந்தோஷப்பட்டான். "அந்தச் சிலையைப் பார்த்துச் செய்தால் என் பொம்மைகள்கூட இன்னும் அழகாக இருக்கும்" என்று அவன் சொன்னான்.

அவன் தினமும் புதிய புதிய பொம்மைகள் செய்தான்; குழந்தைகள் நாள்தோறும் விளையாடி அவற்றைப் பழமையாக்கின. வெகுநாள் கழித்துச் சிலை தயாராயிற்று. அஜயன் விநயனிடம் வந்து அலட்சியமாக, "நீ இந்த ஊருக்கு வந்ததிலிருந்து எத்தனை பொம்மைகள் செய்திருக்கிறாய்?" என்று கேட்டான்.

"அதெல்லாம் யார் எண்ணிப் பார்க்கிறார்கள்! தன்னிடம் இத்தனை பூக்கள் பூக்கின்றன என்ற கணக்குக் கொடிக்குத் தெரியுமா?"

"இதுவரைக்கும் நீ செய்த பொம்மைகளில் சாகாத பொம்மை ஒன்றாவது உண்டா?"

'பொம்மைகள் சாகாமல் இருப்பதில்லை."

"உன்னைப் போன்ற பொம்மைகளுக்குச் சாவு வரலாம்; ஆனால் என்னைப்போன்ற மனிதர்கள் சாகா வரம் பெற்றவர்கள்."

"இந்த உலகத்திலே மனிதர்களும் பொம்மை களைப் போலத்தான்."

"வாயை மூடு! நாளைக்கு வந்து என் சிலையைப் பார்; அப்புறம் என்ன வேண்டுமானாலும் பிதற்று."

சிலைக்காட்சி விழா மிகவும் தடபுடலாக நடந்தது. கல்லிலிருந்து மனித உருவம் உண்டாவதை அந்தப் பட்டிக்காட்டு ஜனங்கள் ஒருபோதும் பார்த்ததில்லை. ஆகையால் அந்தச் சிலையைப் பார்த்ததும் ஒவ்வொரு வனும் சொக்கிப் போய்விட்டான். அஜயனுடைய முகத்தில் வெற்றிப் புன்னகை மிளிர்ந்தது. ஆனால் அது ஒரு கணப்பொழுதுதான்!

"இந்தச் சிலையைப் பார்த்தால் விநயனைப்போல் இருக்கிறதே" என்று ஜனங்கள் மெல்லப் பேசிக் கொண்டார்கள். ஒரு நிமிஷத்திலே அந்தப் பேச்சு, "விநயனுடைய சிலை இது!" என்ற வெற்றியொலியாக மாறியது. அஜயன் சிலையைப் பார்த்தான். பொறாமையில் குருடாகிவிட்ட அவன் கண்ணுக்கு இதுவரைக்கும் இது தெரியவே இல்லை. அஜயனைவிட விநயனுக்கும் அந்தச் சிலைக்குந் தான் ஒற்றுமை அதிகமாக இருந்தது. அவனுடைய பொறாமைப்பட்ட மனம், சிலை செய்யும்போது விஜயனையே சிந்தித்தது போலும்!

அஜயன் அந்தச் சிலையைத் தொலைவிலே காட்டில் எறிய வேலையாட்களுக்குக் கட்டளையிட்டான். ஜனங் கள் அந்தச் சிலையை விரும்பினார்கள்; அவர்கள் அதை எடுத்துப் போக விடவில்லை. அஜயன் தன் ஆட்களை விட்டு ஜனங்களைத் தடியால் அடிக்கச் சொல்லிக் கூட்டத்தைக் கலைத்தான். சிலையை எங்கோ வெகு தூரத்தில் கொண்டுபோய் எறிந்தார்கள்.

தன்னால் ஊராருக்கு நேர்ந்த துன்பத்தைக் கண்ட விநயன், அன்று இரவே யாரிடமும் சொல்லாமல் அந்த ஊரை விட்டுப் போனான். மறுநாளிலிருந்து அஜயன், வெறிச்சென்று கிடந்த கிராமச் சாவடியின் பக்கமாகத் தலை நிமிர்ந்து நடந்தான். விநயன் உட்கார்ந்த இடத்தை வெறித்த பார்வையோடு பார்த்துக்கொண்டு குழந்தைகள் அங்கே நிற்பதை அவன் கண்டான். பல பெண்மணி கள் வந்து அந்த இடத்தைக் கும்பிட்டார்கள். இவர் களுடைய இந்தப் பைத்தியக்காரத்தனத்தைப்பார்த்து அஜயனுக்குச் சிரிப்பாக வந்தது.

ஆனால் ஒரு நாள் அவனுடைய இந்தச் சிரிப்பு மறைந்தது. கிராமச் சாவடியின் பக்கத்தில் ஒரே கூட்டம். சிரமப்பட்டு அதில் நுழைந்து அஜயன் முன்னால் போனான். விநயன் உட்காரும் இடத் திலே ஒரு சிலை வைத்திருந்தது. அஜயன் காட்டிலே எறிந்துவிட்ட சிலைதான் அது! ஜனங்கள் அதைத் தேடிக் கண்டுபிடித்து எடுத்து வந்தார்கள். பாதிச் சிலை வரைக்கும் புஷ்பமயமாக இருந்தது. அந்தச் சிலையை எட்டி உதைக்க வேண்டுமென்று அஜயனுக் குத் தோன்றிற்று. காலைத் தூக்கினான். அதற்குள் ஒரு குழந்தை அந்தச்சிலையைப்போய்க் கட்டிக்கொண்டது.

அது தன் மழலைச் சொல்லில், "எனக்கு நல்ல பொம்மையாகக் கொடுப்பையா? என்ன, நல்ல பொம்மே!" என்றது.

அந்தச் சிலையைப் பார்த்த குழந்தையின் கண் ணிலேதான் எவ்வளவு நம்பிக்கை!

அஜயன் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு பேசாமல் அந்தக் கூட்டத்திலிருந்து நகர்ந்தான்.

## வேண்டாத குழந்தை

ராமராவ் எழுதிய அந்தக் கடிதத்தைப் படித்ததும் எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. அப்படிப் பார்க்கப் போனுல், அதில் அற்புதமான செய்தி எதுவும் இல்லை. "இன்று நான் கோர்ட்டுக்கு வர இயலவில்லை. என் கேஸ்களுக்கு வாய்தா வாங்கிக் கொள்ள வேண்டியது." இவ்வளவுதான் சமாசாரம். மீனுக்கு யாரும் நீச்சல் கற்றுக் கொடுக்க வேண்டியதில்லை. பிச்சைக்காரன், உபாத்தியாயர், டாக்டர், வக்கீல் இவர்களுடைய விஷயமும் அப்படித்தான். பொறுமையும் டியூஷனும் இஞ்செக்ஷனும் வாய்தாவும் அவர்களோடு கூடவே பிறந்தவை.

ஆகையால் ராமராவின் கடிதத்தில் அசாதாரணமான விஷயம் ஒன்றுமே இல்லை. ஆனுல் பல வருஷங்களாக ஒரு நிமிஷம் இப்படி அப்படிப் போகாத கடிகாரம் திடீரென்று நின்றுவிட்டால், அது விசித்திரமாகத் தோன்றுவதில்லையா? அந்தக் கடிதத்தைப் படித்ததும் நான் வியந்ததற்குக் காரணமும் இதுதான். ஏதாவது முக்கிய விஷயம் இருந்தாலொழிய, ராமராவ் இப்படி வாய்தா கேட்கும் வக்கீல் அல்ல.

ராமராவும் ஒரு வக்கீல்தான்; ஆனுல் தலையெழுத்து அவரை வக்கீலாக்கியிருந்தது. முள் இல்லாத பலாப்பழம் அவர்! தருப்பூசனியிலே கனிய வேண்டிய பழம், பலாமரத்தில் வந்து பழுத்தது! அவர் எம். ஏ. யில் ஸம்ஸ்கிருதம் எடுத்துக்கொண்டு முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்ருர். ஒரு பிரைவேட் காலேஜில் புரொபசராவதற்கு அவர் ஆசைப்பட்டார். ஆனுல், அவருடைய ஜாதிதான் குறுக்கே வந்ததோ,

அல்லது வேலைக்குத் தாளம் போடும் ஒருவன் தன் தாயின் பேரால் அந்த ஸ்தாபனத்துக்கு அளித்த நன் கொடைதான்குறுக்கே வந்ததோ,அது காலேஜுக்குத் தான் தெரியும்! ராமராவின் உடம்பில் புரொபசரின் கவுன் ஏறவில்லை. அவர் பேசாமல் பி. எல். லுக்குத் திரும்பினார். பரீட்சை பாஸானதும், 'சின்ன ஊரே நல்லது' என்று எண்ணி, தாலுகாவின் இந்தத் தலை நகரில் வக்கீல் தொழிலைத் தொடங்கினார்.

ஆனால் காளிதாசனுடைய சாகுந்தலத்திலும், ஜயதேவருடைய அஷ்டபதியிலும், பகவத்கீதையிலும், காதம்பரியிலும் வருஷக்கணக்காக வளர்ந்துவிட்ட ஆசாமியின் ரத்தத்தில், கிரிமினல் வழக்குகளை நடத்துவதற்கு வேண்டிய துணிச்சல் எங்கிருந்து வரும்? முதல் முதலில் ஒரு பலாத்கார வழக்கில் பிரதிவாதிக்கு வக்காலத்து வாங்கிக்கொண்டு அவர் மோசம் போனார். துஷ்யந்தன் மறைந்திருக்கும் வரையிலும் தோழிகளிடம் தன் காதலைத் தெரிவித்து விட்டு அவன் நேரில் வந்து முத்தம் தந்ததும் நாணத்தினால் தலை குனிந்த சகுந்தலையைக் கொண்டு, ராமராவ் பெண் வர்க்கத்தின் தன்மையைத் தீர்மானித்துவிட்டார். அது அவருடைய கற்பனை தான். புத்தகம் பனிமூட்டத்தைப் போல; உண்மையான உலகத்தை அதில் காண முடியாது என்பதை இந்த ஸம்ஸ்கிருத வக்கீல் முதல் வழக்கிலேயே தெரிந்து கொண்டார். பிரதிவாதியைப் பிய்த்து வாங்குவதற்கு வாதிகள் சரியான சதியாலோசனை செய்திருந்தார்கள். அவர்கள் ஒரு பெண்மணியைக் கைக்குள் போட்டுக் கொண்டு அவள் மூலமாக வழக்கைத் தொடுத்திருந் தார்கள். இனிமேல் கிரிமினல் கேஸின் வழிக்கே

போவதில்லை என்று ராமராவ் அப்போது முடி போட்டுக்கொண்டார்.

'பெண்ணின் நடத்தை அவளைப் படைத்த பரமனுக்கே தெரியாது' என்ற பழமொழியைத் தொழிலின் ஆரம்பத்திலே அவர் அநுபவத்தில் கண்டார். 'தெய்வம் கொடுத்தால் கூரையைப் பிய்த்துக்கொண்டு கொடுக்கும்' என்ற பழமொழி மட்டும் கடந்த ஒரு மாமாங்கமாக அவர் அநுபவத்துக்கு வந்ததேயில்லை. காவியமும் ஜோஸ்யமும் பாதி உண்மையைக் கொண்டு மக்களை மயக்குகின்றன என்ற உண்மையை அவர் பல வகையிலும் உணர்ந்திருந்தார். ஒரு ஜோஸ்யன் சொன்ன வருஷத்தில் அவருக்குக் கல்யாணம் நடந்தது. ஆனால் அடியோடு குழந்தையே பிறக்காது என்ற அவன் ஜோஸ்யம் முழுப் பொய் ஆயிற்று. கல்யாணம் ஆனதும், ராமராவின் ஜாதகத்தில் இருந்த கிரகங்கள் குடும்பச் சௌகரியத்தை உத்தேசித்து ஒருவேளை தம் இடங்களை மாற்றிக்கொண்டனவோ என்னவோ! முதல் எட்டு வருஷங்களில் அவருக்கு நான்கு குழந்தைகள் பிறந்தன. போன நாலு வருஷமாகத்தான் அவர் வீட்டில் தொட்டிலை ஆட்டுவது நின்றிருந்தது. ஆனால் தொட்டிலை 'அகதி'யாக்கிய பெருமை கிரகங்களைச் சார்ந்ததல்ல; அவர் பம்பாயிலிருந்து வாங்கி வந்த கர்ப்பத்தடைச் சாதனங்களைச் சார்ந்தது என்பதைச் சொல்வதற்கு ஜோஸ்யம் தேவையில்லை. எங்கள் வக்கீல் கூட்டத்தில் இதைப் பற்றி அடிக்கடி பரிகாசம் செய்வது வழக்கம். அவரிடம் எனக்கு எவ்வளவோ மரியாதை உண்டு; ஆனால் நானும் இந்தப் பரிகாசத்தில் கலந்துகொள்வேன்.

மூன்ருவது பிரசவத்திலோ அல்லது நான்காவது பிரசவத்திலோ—சரியாக ஞாபகமில்லை - அவர் மனைவி மிகவும் கஷ்டப்பட்டாள். அதனுல்தான் கர்ப்பத் தடைப் பைத்தியம் அவர் மூளையில் புகுந்தது என்பது எங்கள் எண்ணம். அவருக்கு மிகவும் இரக்கமுள்ள சுபாவம். கிரிமினல் வழக்கு எடுத்துக்கொள்வதை அவர் தாமாகவே விட்டுவிட்டார். சிவில் வழக்கில் வருமானம் சுமார்தான். குடும்பத்திலே கணவன் மனைவி, நாலு குழந்தைகள், வருவோர் போவோர்–இப்படிப் பல பேர் இருந்தார்கள். இதோடு, மெடிகல் காலேஜில் படித்த தம்முடைய ஒன்றுவிட்ட தம்பிக்கு வேறு, அவர் நாலைந்து வருஷகாலம் நடுவிலே உதவி செய்தார். இவ்வளவு நெருக்கடியிலுங்கூட, வாய்தா வாங்கிக்கொண்டு வழக்கை நீடித்து வைத்துப் பணம் வாங்கும் எண்ணம் அவர் மனத்தில் ஒருநாளும் உதித்ததில்லை. "நம்முடைய ஏழைக் கட்சிக்காரனை வீணுக ஒரு முறை அலைய வைத்தால், அவனுடைய நாலு குழந்தை குட்டிகள் இரண்டு நாளைக்கு அரை வயிறுப் பட்டினிதான்!" என்று அவர் வெளிப்படையாகச் சொல்லுவார். பிள்ளைப் பேற்றிலும் தொழிலிலும் அவருக்கு முன்னேர்களும் உயர்ந்தவர்களுமான வக்கீல்கள் அவருடைய இந்த நாணயத்தைக் கண்டு, "ராமராவ் தவறிப்போய் வக்கீலாக வந்துவிட்டார். சங்கராசாரியாருடைய பீடந்தான் இவருக்கு ஏற்ற இடம்" என்று கிண்டல் செய்வது உண்டு. என்ன கிண்டல் செய்தாலும் ராமராவின் முறுவல் சற்றும் மங்காது; அவர் தீர்மானித்து நடந்த பாதையிலிருந்து ஒருபோதும் வழுவமாட்டார்.

கர்ப்பத்தடை விஷயத்திலும் அவரை இப்படித்

தான் பரிகாசம் செய்தார்கள். எங்கள் வக்கீல் சங்கத்தில் கர்ப்பத்தடைப் பிரச்னையைப்பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்தவர் யாருமே இல்லை. வயதான சில வக்கீல்களுக்குப் பத்துக் குழந்தைகள் இருந்தன. என்னைப் போன்ற இளம் வக்கீல்கள் பலர் செல்வத்திலே இல்லாவிட்டாலும் பிள்ளைப் பேற்றிலே அவர்களுடைய வழியைத் தொடர்ந்து வந்தோம். எங்கள் சங்கத்திலே குலுங்கச் சிரிக்க வேண்டுமானால் உடனே கர்ப்பத்தடை விஷயத்தை எடுத்துக் கொள்வார்கள். நான்காவது குழந்தை பிறந்ததும் ராமராவ் கர்ப்பத்தடையைப் பற்றிப் படிக்க ஆரம்பித்தார். அவர் ஒரு புத்தகத்தைப் படிக்கும்போது யாரோ ஒருவர் பார்த்துவிட்டார். அப்புறம் கேட்க வேண்டுமா? நாசுக்கான விஷயத்தில் நிறையப் பரிகாசம் செய்யும் ஆசை யாருக்குமே உண்டு. எங்கள் 'பாரி'ல் புதுமையும் பழமையும் தூய்மையும் ஆபாசமுமான பல வேடிக்கைப் பேச்சுக்கள் நடக்கும். இன்னமும் குழந்தைகள் பிறந்துகொண்டிருந்த பீஷ்மாசாரியர்கள், "ஜாக்கிரதை, ஐயா ராமராவ்! கர்ப்பத்தடைக்குப் பதிலாக, கர்ப்பம் உண்டாவதற்கு ஏதாவது மருந்து கொடுத்து விடப் போகிறீர்கள்!" என்று அம்பெய்தார்கள். இளைஞர்கள் மட்டும் கிழவர்களுக்குத் தோற்றவர்களா? "ராமராவ், சில சமயம் தெய்வம் மிகுந்த தாராளத்தனம் காண்பிப்பதுண்டு. குருடன் ஒரு கண் கேட்கப் போனால் தெய்வம் அவனுக்கு இரண்டு கண்ணையும் கொடுப்பதுண்டு!" என்று ஓர் இளம் வக்கீல் வியாக்கியானம் செய்தான்.

அளவுக்கு மிஞ்சிய இந்த மாதிரியான பரிகாசத்தைக் கேட்டு எனக்குச் சில சமயம் கோபம் வரும்.

ஆனால் ராமராவ் அதைச் சாந்தமாகக் கேட்பார். சாந்தமே அவருடைய வாழ்க்கைச் சூத்திரம் என்று தோன்றிற்று. அவருடைய படிப்பு ஒருநாளும் நின்றதில்லை. தனிக் கூட்டத்தில் அவர் மிகவும் ரசமாகப் பேசுவார். ஆனால் இவ்வளவு இருந்தும் அவர் பொதுக்கூட்டத்தில் ஒரு தடவைகூடப் பேசினதில்லை. நான் வக்கீல் தொழிலை ஆரம்பிக்க இங்கே வந்தபோது அவர் வீட்டில்தான் வந்து இறங்கினேன். அவர் என்னைத் தம் தம்பிபோல நடத்தினார். மோட்டார் ஓட்டி முதல் எழுத்தாளன் வரைக்கும் எங்கே பார்த்தாலும் பொருமைப் பிண்டங்களைப் பார்க்கும்போது பத்து வருஷத்துக்கு முன்னால் அவர் காட்டிய அன்பு இன்னமும் என் நெஞ்சைக் கவர்கிறது. கோர்ட்டிலும் கிளப்பிலும் தினமும் சந்தித்து வந்ததால் நாங்கள் ஒருவர் வீட்டுக்கு மற்றவர் அதிகமாகப் போவதில்லை. ராமராவின் வீட்டுக்கு நான் எப்போதாவது போனால் அங்கே ஒரே அமைதியும் மகிழ்ச்சியுமாக இருக்கும்.

இதனால்தான் அந்த எதிர்பாராத கடிதம் என்னைக் கலவரப்படுத்தியது. அன்று அவருக்கு முக்கியமான கேஸ்கள் இரண்டொன்று இருந்தன. அவருடைய கட்சிக்காரர்களுக்கு ஏற்கனவே அலைச்சல் அதிகமாகி விட்டதால் அன்று அந்தக் கேஸ்களைத் தீர்த்துவிட வேண்டுமென்று அவர் முதல்நாள் சாயந்தரம் என்னிடம் சொல்லியிருந்தார். அப்படி இருக்க, இந்தக் கடிதம் வருவானேன்?

ஒருவேளை அவருக்கு ஜுரம் கிரம் வந்திருக்குமோ! அவர் ஒரு நாளும் சுக்குப் பற்றுக்கூடப் போட்டுக்கொண்டதில்லை. அவர் மனைவிக்கு ஏதாவது உடம்பு சரியில்லையோ? அது சாத்தியந்தான். என்

மனைவியும் அவளும் சந்தித்து ஐந்தாறு மாதமாகிறது. நடுவில் ஒரு தடவை விருந்துக்குக் கூப்பிட்டபோது, உடம்பு சரியில்லாமையால்தான் அவள் எங்கள் வீட்டுக்கு வரவில்லை! என் மனைவியைப் போலவே மற்ற வக்கீல்களின் மனைவிமாரும் நோயாளிகள் ஆகிவிட்டார்களோ என்னவோ, தெரியவில்லை. ஆனால் மனைவி அப்படி நோயாளியாக இருந்தால் ராமராவ் முதல் நாள் சாயந்தரமே அதை என்னிடம் சொல்லியிருப்பாரே! எனக்கு அவர்மேல் என்னதான் கோபம் வந்தது, தெரியுமோ! எதையும் தெளிவாகக் கடிதத்தில் எழுதுவதுதானே? மனசில் இது குறுகுறுத்துக் கொண்டே இருந்ததனால், வேலை முடிந்ததும் நான் என் சைக்கிளை நேரே அவர்வீட்டுக்குத் திருப்பினேன். ஆசாமி மேல்மாடி ஜன்னலிலிருந்து வெளியே எட்டிப் பார்த்துக்கொண் டிருந்தார். 'பயப்படும்படியாக ஒன்றும் இராது' என்று எண்ணியதும் என் மனம் சாந்தமடைந்தது. என்னைப் பார்த்ததும்அவர் கீழே இறங்கி வந்தார்.

மாடிப்படியில் ஏறிக்கொண்டே, "என்ன விஷயம்?" என்று நான் கேட்டேன்.

"எனக்குப் பெண்குழந்தை பிறந்தது!"

நான் அவருக்குப் பின்னால் படியேறியதால் அவர் முகத்தைப் பார்க்க முடியவில்லை.

மேலே போய் உட்கார்ந்ததும், "அண்ணியின் உடம்பு தேவலையா?" என்று கேட்டேன்.

"இப்பொழுது தேவலை. மத்தியானம் அவள் பயந்தே போய்விட்டாள். இயற்கைக்கு அடியோடு இரக்கமே கிடையாது. அவளுக்குத் தைரியத்துக்காகத்தான் நான் இருந்தேன். இல்லாவிட்டால்—"

அண்ணி பிரசவித்து, அவளுக்குப் பெண் குழந்தை பிறந்தது. ஆனால் அவள் கர்ப்பம் தரித்திருந்தது யாருக்குமே தெரியாது. நடுவில் எங்கள் வீட்டில் விருந்துக்கு அழைத்தபோது அவள் வரவில்லை. உடம்பு சரியில்லை என்று சொல்லி அனுப்பினாள். அநேகமாக விஷயம் இதுவாகத்தான் இருக்கும்! ஆனால் உலகத்தில் எந்தப் பொய்யும் நீடித்திருப்பதில்லை என்பதை அவள் மறந்துவிட்டாளே!

நான் ராமராவிடம் சிரித்துக்கொண்டே, "புரட்சிக்காரர்கள்போல நீங்கள் இருவரும் சேர்ந்து ரகசியச் சதியாலோசனை செய்திருக்கிறீர்கள்!" என்றேன்.

"ஆனால் போலீசாருக்கு இன்று புலன் கிடைத்து விட்டது! எங்களுக்கு இனிமேல் தூக்குத் தண்டனை தான்!" என்று அவரும் சிரித்துக்கொண்டே சொன்னார்.

இந்தப் பதில் பொய்யாகவில்லை. ராமராவுக்குப் பெண் பிறந்த செய்தியைக் கேட்டு, 'பாரி'ல் உள்ள இளம் பீஷ்மாசாரியர்களுக்கு என்னதான் அபார மகிழ்ச்சி உண்டாயிற்று! விசுவாமித்திரர் மேனகையின் வலையில் கட்டுண்ட செய்தியைக் கேட்ட இந்திரன்கூட அவ்வளவு மகிழ்ந்திருக்க மாட்டான். பொறாமை அநாதி காலமாகவே மனிதருக்கு நண்பன். காலத்துக்கு ஏற்றபடி உருவம் மாறுகிறது; அவ்வளவுதான் வித்தியாசம். ராமராவ் முக்கியமான இரண்டொரு வழக்கில் ஒரு கிழ வக்கீலை ஜயித்திருந்தார்; அவருக்குக் கர்ப்பத்தடை யோசனையும் சொல்லியிருந்தார் ராமராவுக்குப் பெண்

குழந்தை பிறந்ததைக் கேட்டதும், 'ஆசாமிக்குச் சரியானபடி மூக்கு உடைந்தது. கர்ப்பத்தடையைப் பற்றி எங்களிடம் வம்பளந்தானே, என்ன ஆச்சு!' என்ற கருத்தோடு அந்தக் கிழவர் பார்த்ததை நான் மறக்க முடியாது. அறிவுக்கும் உள்ளத்துக்கும் சம்பந்தமே இல்லாத ஒரு பிராணியை இயற்கை சிருஷ்டிக்க விரும்பியது; அது எவ்வளவோ விதத்தில் முயன்று, கடைசியில் மனிதனைப் படைத்தது.

பத்துப் பதினொரு நாள்வரைக்கும் பரிகாசம், கிண்டல், வக்கிரப் பேச்சு முதலிய எல்லாவற்றையும் ராமராவ் பொறுமையாகக் கேட்டுக்கொண்டார். அந்தக் கிழ வக்கீலோ இரண்டு நாக்கு உடையவர் போலப் பேசினர். நான்கூட இரண்டொரு தடவை ராமராவிடம், "சுடச்சுடச் சரியான பதில் சொல்லுங்களேன்!" என்றேன்.

"பார்க்கலாம்!" என்று சொல்லி, அவர் சிரித்தார்.

குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாள் சாயந்தரம் அவர் அந்தக் கிழ வக்கீலையும் என்னையும் இரண்டோர் இளம் நண்பர்களையும் வீட்டுக்கு அழைத்திருந்தார். டீ குடிக்கும்போது அவர் தமது சிறு குழந்தை ஆனந்தனிடம் எவ்வளவு அன்பாக இருந்தார்! தகப்பனரைப் பார்த்துக் குழந்தை டீயை ஆற்றுவதற்காக வாயால் ஊதியபோது, டீ முழுவதும் அவர் முகத்தில் தெறித்தது. ஆனல் அது பன்னீர்போல அவருக்குத் தோன்றிற்று. திடீரென்று ஆனந்தன் கண்ணுமூச்சி விளையாட விரும்பினன். அவர் எழுந்திருக்கவில்லை. உடனே அவன் அழ ஆரம்பித்தான். பிறருக்கு அவனுடைய அழுகையால் தொந்தரவு வேண்டாமென்று, அவர் எழுந்து அவனேடு விளையாடலானர். அவனைப்

பிடிக்க அவர் ஓடியபோது அவன் மூலையிலே வளைந்து திரும்பியது, முயல்குட்டி வளைந்து ஓடுவதுபோல இருந்தது.

தகப்பனும் குழந்தையும் இப்படி விளையாடியது எல்லாருக்கும் ஆனந்தமாக இருந்தது. ஆனால் வக்கீல் தொழிலிலே தலை நரைத்துப்போன அந்தக் கிழவர் இதைப் பயன்படுத்திக்கொள்ளத் தவறவில்லை. "ராமராவ், உங்கள் கர்ப்பத்தடைக் கொள்கையை இந்த ஆனந்தனே கண்டிக்கிறானே! ஆகா! குழந்தைகள் என்றால் வாழ்விலுள்ள மலர்கள்!" என்றார்.

"மலர்கள் என்பது சரி; ஆனால் காட்டுமலர் அல்ல!" என்று ராமராவ் குறும்பாகப் பதில் சொன்னார்.

வாதம் வீணாக வளர வேண்டாமென்று கருதிய நான், "குழந்தைக்கு என்ன பெயர் வைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

ராமராவ் குழந்தைகளுக்குப் பெயர் வைப்பதில் எப்போதுமே அழகிய பொருத்தம் இருக்கும். மூத்தவன் காலையில் பிறந்ததால் அவனுக்குத் திவாகரன் என்று பெயர்; இரண்டாவது பெண் இரவில் பிறந்தவள் ரஜனி; அருணோதயத்தில் பிறந்தவன் அருணன்! பெயர் வைக்கும் இந்தச் சரித்திரத்தை நான் நினைப்பதற்குள், "அகல்பிதா!" என்றார் ராமராவ்.

எல்லாருமே அவரை வியப்போடு பார்த்தோம். இந்தப் பெயரில் காவியமும் இல்லை, எளிமையும் இல்லை.

ஆனந்தன் விளையாடிக்கொண்டே வீட்டுக்குள் போனான். தம் தொழில் நண்பர்களை ராமராவ் ஒரு தடவை கூர்ந்து பார்த்தார். 'ஏதாவது லெக்சர் கொடுக்கப் போகிறீர்களா என்ன?' என்று நான் கேட்க

நினைத்தேன். ஆனால் அவர் கண்ணைப் பார்த்ததும் என் கேள்வி அமுங்கியது. ஒளியும் இரக்கமும் அவர் கண்ணில் தென்பட்டன.

அவர் நகைத்தவண்ணம் பேசலானார்: "கடந்த பத்து நாளாக எல்லாரும் என்னை மனம் போனபடி பரிகாசம் செய்தீர்கள். ஒருவன் விழுந்தால் சிரிப்பது மனித சுபாவம். ஆனால் அவன் விழுந்த இடத்தின் வழியாகவே நாமும் போகவேண்டும் என்ற எண்ணம் சிரிப்பவருக்குத் தோன்றுவதில்லை. என்னை மட்டும் பரிகாசம் செய்திருந்தால் நான் ஒன்றும் பேசமாட்டேன். மனிதனைக் கண்டு சிரிப்பவர்கள் தத்துவத்தையும் பரிகசிக்க ஆரம்பிக்கிறார்கள். தத்துவத்தை வெளிப்படையாக எதிர்ப்பது நல்லது; இப்படிப் பரிகாசம் செய்வது மிகவும் கெடுதல்!"

ராமராவ் எல்லாருக்கும் கர்ப்பத்தடையை உபதேசிக்கப் போகிறாரா என்ன என்று எண்ணினேன். அதனால் மறுநாள் கோர்ட்டில் பரிகாசம் அதிகமாவதுதான் மிச்சம். வாலறுந்த நரி போன்ற நிலைமையில் அவர் இருக்கவேண்டி வரும். ஜாக்கிரதையாகப் பேசும்படி அவருக்குக் கண்ணால் சாடை காட்டினேன். ஆனால் அவருடைய கவனம் வேறு எங்கோ இருந்தது.

"என்னைப்பற்றியேதான் கொஞ்சம் பேசப் போகிறேன் ; மன்னியுங்கள். தனி மனிதனுடைய உண்மையான அநுபவங்கள் சமூகத்துக்குப் பயன்படும் என்றுதான் இதைச் சொல்லுகிறேன்."

வேறு யாராவது இப்படிப் பேசியிருந்தால், அதன் உண்மையைப்பற்றி மற்ற வக்கீல்களுக்குச் சந்தேகம் தோன்றியிருக்கக்கூடும். ராமராவ் விஷயத்தில் அந்தச் சந்தேகத்துக்கே இடமில்லை.

"சிறுவயது முதல் நான் பார்க்கிறேன். குறுக்கெழுத்தில் எழுதிய புத்தகந்தான் தன் வாழ்க்கை என்று ஒவ்வொருவனும் கருதுகிறான். ஒருவனுடைய அநுபவம் மற்றவனுக்குத் தெரிவதில்லை. வருஷக்கணக்காக ஒரே இடத்தில் பழகும் நாம், நம்முடைய நல்ல அநுபவங்களையும் தீய அநுபவங்களையும் மனம்விட்டுப் பிறருக்குச் சொல்லும் வழக்கம் இல்லையே? மனத்துக்குள்ளேயே மறுகிக் குமுறித் தட்டுத் தடுமாறி வாழ்க்கையில் வழி கண்டு பிடிக்க வேண்டியது! பார்க்கப்போனால் எல்லாருடைய வழியும் ஒன்றுதான். காதல் விளையாட்டு முதற்கொண்டு தந்தையாகும் பொறுப்பு வரைக்கும் — தந்தையாகும் பொறுப்பாவது, நம்மில் சிலர் தாத்தாவாகியிருக்கிறாமே!"

கிழ வக்கீலைத் தவிர மீதிப் பேர் முறுவல் பூத்தார்கள். ராமராவ் என்னதான் சொல்லப் போகிறார் என்ற ஆவல் தணியவில்லை.

"உண்மையான அநுபவங்களை நாம் கொடுக்கல் வாங்கல் செய்வதில்லை, ஆதலால் மானிடச் சாதி எவ்வளவுதான் முன்னேறினாலும், ஒவ்வொருவனும் காட்டுமிராண்டிக் காலத்தைப் போலவே இன்று வாழ்க்கையைத் தொடங்குகிறான். முன்னோர் தடுக்கி விழுந்ததைப் பின்னோர் பயன்படுத்திக்கொள்ள வழியுண்டு; ஆனால் அது எப்போது? எங்கே தடுக்குகிறது என்பதை முன்னோர் சொன்னால்தானே? தடுக்கி விழுந்தும், ஒன்றுமே நடவாதது போல அவர்கள் போகிறார்கள்; அதனால் சமூகத்துக்கு—" என்று கூறி அவர் நிறுத்தினார். மீண்டும், "இது ஏதோ லெக்சர் அடிக்கிறேன் என்று நீங்கள் கைதட்ட ஆரம்பிப்பீர்கள். அகல்பிதா பிறந்த கதையை மட்டும் சொல்லிவிடு

கிறேன்'' என்று தொடங்கினர்.

காவியமயமான காதற்கதையைப் போல, ராமராவ் அகல்பிதா பிறந்த கதையைச் சொன்னர். பன்னிரண்டு வருஷகாலம் அன்பாக வாழும் தம்பதிகள், கர்ப்பத்தடைச் சாதனங்களை மீறி அவர்களுக்குப் பிறந்த குழந்தை—இந்தக் கதையில் என்ன காவியம் இருக்கப்போகிறது என்றுதான் எல்லாருமே நினைத்தோம்.

''நான் குழந்தையாக இருந்தபோதே அம்மா செத்துப் போனுள். எனக்கு ஒன்றுவிட்ட அக்கா ஒருத்தி இருந்தாள். அவளுக்கு என் சிறு பிராயத்திலேயே கல்யாணம் ஆகிவிட்டது. அப்படி இருந்தும் நான் காலேஜில் படித்த நாளில் எந்தப் பெண்மீதும் என் கவனம் செல்லவில்லை. முதல் வகுப்பில் தேறும் பையனுதலால், என் நோட்ஸைப் பெண்கள் வாங்கிக் கொள்வார்கள். நானும் ஆனந்தமாகக் கொடுப்பது உண்டு. ஒரு தடவை ஒரு பெண்ணிடமிருந்து நோட்ஸ் திரும்பிவந்தபோது அதில் விசித்திர நறுமணம் வீசியது. ஒரு நிமிஷம் அந்த நறுமணம் என்னை மயக்கியது. மறு நிமிஷம் புத்தகத்தைப்பற்றிய ஒரு சுலோகம் எனக்கு ஞாபகம் வந்தது: 'எண்ணெயும் தண்ணீரும் படாமல் புத்தகத்தைக் காக்கவேண்டும்.' இந்தப் பெண்ணின் மேஜையில் எப்போதும் காமினியா தைலம் இருக்கும்; அது தப்பித் தவறி என் நோட்ஸில் கொட்டிப் போனுல், பிறகு புத்தகம் எதற்குப் பயன் படும் என்று நான் எண்ணினேன்.

''காலேஜில் இருந்தபோது நான் சினிமாப் பார்த்ததுகூட மிகவும் குறைவுதான். எந்த நடிகையையும் எனக்குப் பிடிக்காது. கிரேடா கார்போவின் ஓர்

அழகிய படத்தை-ஒரு நண்பன் எனக்குத் தீபாவளிப் பரிசாக அளித்தான். நான் வேறொரு நண்பனிடம் அதைக் கொடுத்து, பதிலுக்கு மகாத்மா காந்தியின் படத்தை வாங்கிக்கொண்டேன். இந்தக் காலத்துப் பிள்ளைகள் இதை நம்புவதுகூடச் சிரமம்.

"என் வக்கீல் தொழிலும் குடித்தனமும் ஒன்றாக ஆரம்பித்தன. என் மனைவி அவ்வளவாகப் படித்தவளல்ல; ஆனால் எழுதப் படிக்க அவளுக்கு மிகவும் ஆசை. சமூகத்துக்கு ஏதாவது உதவி செய்யவேண்டும் என்பது அவள் விருப்பம். அதற்காக நான் அவளுக்குச் சில விஷயங்கள் கற்றுக் கொடுத்தேன்; அதற்குள் திவாகரன் பிறந்தான்!"

எதையோ நினைத்துக்கொண்டு ராமராவ் உரக்கச் சிரித்துவிட்டு, தொடர்ந்தார்: "திவாகரன் பிறந்தது என் வாழ்க்கையில் மிகவும் ஆனந்தமான சம்பவம். அந்தக் குழந்தையின் பிடியில் மூவுலகத்துச் செல்வமும் நிரம்பியிருந்தது. குழந்தை இல்லாதவனுக்குச் சொர்க்கம் கிடையாது என்பது பொய்யல்ல. முதல் குழந்தை என்பது பூமியில் இறங்கிய சொர்க்கம்."

அவர் கண்ணில் வாத்ஸல்யம் உருவாகியிருந்தது. கட்டை - விரலைச் சூப்பும் குழந்தை, கவிழும் குழந்தை, தவழும் குழந்தை, தளர் நடையிடும் குழந்தை, ஓடும் குழந்தை, பிடிவாதம் பிடிக்கும் குழந்தை - இப்படி எத்தனையோ வடிவங்களில் திவாகரன் அப்போது அவர் கண்முன்பு தோன்றியிருக்க வேண்டும்.

"திவாகரனுக்குப் பிறகு ரஜனி பிறந்தாள்; அவளுக்கு அப்புறம் அருணன் பிறந்தான். என் மனைவிக்கு இரண்டு வரி படிக்கக்கூட ஓய்வில்லை. நடுத்தரக் குடும்பத்தின் செலவும் வருமானமும் சக்களத்தி

களைப்போல, வீட்டு வேலைகளையெல்லாம் செய்து மூன்று குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளவே என் மனைவிக்குப் பொழுது போதவில்லை. பெண்ணின் வாழ்க்கையிலே அறிவு வளராமல் தடைப்படுவதை என் மனைவியின் விஷயத்திலேயே நான் நன்ருகக் கண்டேன். அவள் சொல்லாவிட்டாலுங்கூட, அது எனக்குத் தெரியாதா? 'கொஞ்சமாக இருப்பது நல்லது' என்ற விதி குழந்தைப் பேற்றுக்கும் பொருந்தும் என்று யாராவது அப்போது என்னிடம் சொல்லி யிருந்தால் அவர்களைப் பைத்தியம் என்று எண்ணி யிருப்பேன். அருணனுக்குப் பல் முளைத்தபோது ஒரு நண்பனுக்கு நான் எழுதிய கடிதம் இன்னமும் ஞாபகம் இருக்கிறது. 'காளிதாசன் பிறத்தியாருடைய குழந்தைகளைத் தூரத்திலிருந்தே பார்த்துவிட்டு அவற்றின் முறுவலை வர்ணித்திருப்பான். சொந்த அநுபவத்திலிருந்து அவன் எழுதியிருந்தால், பல் முளைக்கும்போது குழந்தைகள் சிணுங்குவதும் நோய்வுறுவதும் அவனுக்குத் தெரிந்திருக்கும்! அப்போது அவன் இப்படிப் பாடியிருக்க மாட்டான்!' என்று நான் எழுதியிருந்தேன்.''

நாங்கள் லேசாகச் சிரித்தோம். வெப்பமான சூழ்நிலையில் சிறிது தண்மை வீசியது.

''தந்தை ஆகாமல் ஆணின் வாழ்க்கையும் தாய் ஆகாமல் பெண்ணின் வாழ்க்கையும் பூர்த்தியடைவதில்லை. ஆனல் அதற்காக ஒவ்வொருத்தியும் காந்தாரியை உதாரணமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்பதில்லை! மேலும் மேலும் குழந்தைகள் பிறந்து கொண்டே இருந்தால் தாயின் உடல் இளைக்கிறது; அறிவு குன்றுகிறது; அது குழந்தைகளைப் பெற்று

வளர்க்கும் யந்திரமாகிவிடுகிறது; குழந்தைகள் அறிவில்லாத சூழ்நிலையில் வளருகின்றன. இந்த விஷயத்தைக் கவனிக்க யாருமே விரும்புவதில்லை. குடிசையில் வாழும் குடியானவனுயினும் சரி, பங்களாவில் வாழும் டாக்டராயினும் சரி; நாய்களும் பூனைகளும் குட்டி போடுவது போலத்தான் இவர்களும் குழந்தைகளைப் பெறுகிருர்கள். இயற்கை நமக்கு நண்பனுக இருப்பது போலவே எதிரியாகவும் இருக்கிறது. படித்தவர்கள் இதைக் கவனித்தால்தானே?''

அவருடைய கடைசி வாக்கியத்தைக் கேட்டு நாங்கள் திடுக்கிட்டோம். இயற்கை நமக்கு நட்பாக இருப்பதுபோலவே எதிரியாகவும் இருக்கிறது! ஓயாமல் குழந்தைகள் பிறந்ததனுல் க்ஷயத்தைப்போன்ற நோய்க்குப் பலியான பல பெண்மணிகளின் வாழ்க்கை என் நினைவுக்கு வந்தது. நோயாளிக் குழந்தைகள், அரைவயிறுப் பட்டினியான குடும்பம், தாங்காத தரித்திரத்தில் தவிக்கும் கோடிக்கணக்கான ஜீவன்கள்-உண்மைதான், இயற்கை மிகவும் விசித்திரமானதுதான். முதல் குழந்தை பிறக்கும்போது தெய்விக இன்பத்தை அளிக்கும் அதே இயற்கை, கும்பல் கும்பலாகக் குழந்தைகள் பிறக்கும்போது குடும்பத்தை நரகமாக்கிவிடுகிறது. சொர்க்க எல்லையும் நரக எல்லையும் அடுத்தடுத்து இருக்கின்றன என்பதில் சந்தேகமே இல்லை.

"இயற்கையை வென்றுதான் மனிதன் கொஞ்சமாவது சுகம் பெற்றிருக்கிருன்; இன்னும் அதிக இன்பம் பெற முடியும். அருணன் பிறந்ததும் நான் வெற்றி வழியில் செல்லலானேன். காந்தியடிகளிடம் எனக்கு எப்போதுமே மதிப்பு உண்டு. நான் பேசாமல்

என் கட்டிலை வெளித்திண்ணையில் போட்டுக் கொண்டேன். ஒத்துழையாமைக்குப் பயன் கிடைக்கத்தான் வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் இந்த மாறுதலினால் ஒரு விந்தைச் சம்பவம் நிகழ்ந்தது. சமூக விஷயங்களைப்பற்றிச் சிந்தித்தால் என் மண்டை கொதிப்பது வழக்கம். ஒரு நாள் இப்படித்தான் சிந்தித்தபோது, என்ன செய்தும் தூக்கம் வரவில்லை. வெளியே பால்போல நிலாக் காய்ந்தது. மண்டைச் சூடு தணியட்டுமென்று வெளியே உலாவப்போனேன். நான் இல்லாதபோது என் மனைவி வெளியே வந்தாள். காலியாக இருந்த கட்டிலைப் பார்த்தாள். அவ்வளவு தான். வீட்டிலே என்மீது எழுந்த சந்தேகத்தினால் உண்டான கலவரத்தைச் சொல்லி முடியாது!"

இதைக் கேட்டதும் எங்கும் ஹாஸ்ய அலை வீசியது. அது தணிந்ததும், ராமராவ் மறுபடி தொடங்கினார்: "இந்த வேடிக்கை இருக்கட்டும். கணவனும் மனைவியும் இவ்வளவு கண்டிப்பாக விலகியிருப்பது, நமக்குத் தோன்றுவதுபோல அவ்வளவு சுலபமல்ல. மனிதனுடைய உடலைப் பார்க்க அவன் மனம் பல தடவை பலவீனமடைகிறது. இமயமலைக்குச் சென்றோ அல்லது அற்புதமான செயலில் முனைந்தோ, அவன் எல்லா உணர்ச்சிகளையும் விகாரங்களையும் மறந்து விடலாம்; ஆனால் வீட்டிலே நான்கு சுவருக்குள் வாழ்நாள் முழுவதும் அடைத்துக்கொண்டு, வயிற்றுக்காக நாள் முழுவதும் உழைத்துவிட்டு, கேவலம் கற்பனை இன்பத்திலேயே வாழ்வது எளிதல்ல. வெளியுலகத்துத் தொழிலிலே அலுத்துப்போன ஆணுக்கு, மனைவியின் அன்புதான் ஆறுதலை அளிக்க முடியும். வயதான மனைவியினிடம் காதலியின் தன்மையும்

தாய்மையும் கலந்திருக்கின்றன. மனைவியினிடமிருந்து விலகியிருப்பதென்றால், அவளிடமிருந்து கிடைக்கும் தாய்மை யின்பத்தையும் மனிதன் இழக்க வேண்டியதுதான்! ஆதலால் எவ்வளவோ சிரமத்துடன் என் சோதனையைத் தொடங்கினேன். இயற்கைதான் என்னைத் தோற்கடித்தது.''

ஏதோ காதல் சம்பவம் நம் காதில் விழப்போகிறதென்று எல்லாரும் காதைத் தீட்டிக்கொண்டோம்.

''என் மனைவிக்குத் திடீரென்று அடிக்கடி மயக்கம் வந்தது. அதற்குக் காரணம் - கர்ப்பத்தடைச் சாதனங்களைப்பற்றி நான் கொண்டிருந்த பிடிவாதந்தான்! பிறகு ஆனந்தன் பிறந்தான்!''

''அகல்பிதாவைப் பற்றிச் சொல்லவில்லையே?'' என்று இரண்டு மூன்று பேர் ஒரேயடியாகக் கேட்டார்கள்.

''அதைத்தானே சொல்லுகிறேன்!'' என்று சிரித்துக்கொண்டே ராமராவ் ஆரம்பித்தார்.

''ஆனந்தன் பிறந்ததும், கர்ப்பத்தடையைப்பற்றி நான் நிறையப் படிக்கலானேன். வெறும் கற்பனையைக் கொண்டோ தத்துவத்தைக் கொண்டோ வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்க முடியாது. ஆனந்தன் பிறந்து நாலு வருஷம் ஆயிற்று. என் மருமான் டாக்டர், போன வருஷம் தீபாவளிக்கு எங்களை அழைத்திருந்தான். நாலு நாள் அங்கே இருப்பதற்கு நாங்கள் எல்லாருமே போயிருந்தோம். அவன் டாக்டராகி இரண்டு வருஷந்தான் ஆயிற்று; ஆகவே அவனுடைய இடம் சின்னதாகத்தான் இருக்கும் என்று எண்ணியிருந்தோம். பார்த்தால், அவன் ஒரு பெரிய பங்களாவை வாடகைக்கு வைத்திருந்தான். எங்களைக்

கேட்காமலே அவன் ஓர் அழகிய அறையில் நாங்கள் தங்க ஏற்பாடு செய்திருந்தான். அவனிடம் ஒன்றும் பேசவே வழியில்லை. இல்லாவிட்டால் எனக்கும் என் மனைவிக்கும் ஏதோ தகராறு என்று அவன் நினைத்து விடுவானே!"

எல்லாரும் வேடிக்கையாகச் சிரித்தோம்.

"தீபாவளிப் பண்டிகை முடிந்ததும், அவர்கள் இருவரும் எங்களைப் போக விடுவதாக இல்லை. சிறு குழந்தைகளுக்குக் கண்ணுமூச்சி பிடிப்பதுபோலவே, இளந் தம்பதிகளுக்கும் பெரியவர்களின் கண்ணை மூடி விட்டுக் காதல் விளையாட்டிலே முனைவது ஆனந்த மாக இருக்கும்போலும்! இல்லாவிட்டால் அவர்கள் இருவரும் எங்களை அவ்வளவு வற்புறுத்தி இருக்கச் சொல்வானேன்? இருபது நாள் இப்படிக் கழிந்தது. அன்று பௌர்ணமி. மறுநாள் காலையில் புறப்பட்டு நாங்கள் இங்கே வருவதாக இருந்தோம். வெளியே நிலா ஜோராக இருந்தது. என் மனைவி சொஸ்தமாகத் தூங்கினாள் நான் சுக்கிரதாரகையைப் பார்த்தபோது என்னையே மறந்துவிட்டேன். சோலையில் வீசிய நறு மணம் உடலில் ஒவ்வோர் அணுவையும் புல்லரிக்கச் செய்தது. சுக்கிரனிடமிருந்து என் பார்வையைத் திருப்பியபோது, எதிரே மருமானும் அவன் மனைவி யும் கைகோத்துக்கொண்டு உலாவுவதைக் கண்டேன். அவன் சட்டென்று அவளை முத்தமிட்டான். அந்தக் காட்சியினால் மயங்கி உள்ளே பார்த்தேன். என் பதி னைந்து வருஷ வாழ்க்கை ஒரேயடியாக மறைந்தது. என் மனைவியை முதல் முதலாக அப்போதுதான் பார்ப்பதுபோல மோகனத்தோற்றம் உண்டாயிற்று."

அந்தக் கிழ வக்கீல் குறுக்கிட்டு, "நீங்கள் சரியா

கத்தான் வாதாடுகிறீர்கள். குற்றவாளியே குற்றத்தை ஒப்புக்கொண்ட பிறகு—'' என்று இழுத்தார்.

''நீங்கள் சொல்வது புரியவில்லையே?''

''கர்ப்பத்தடைச் சாதனங்களை உபயோகித்துங் கூட உங்களுக்குப் பெண் பிறந்ததே, ஸார்!''

ராமராவ் கலகலவென்று சிரித்து, ''பேஷ்! நாலு நாளைக்கு மருமான் வீட்டுக்குப் போகிறவன் இந்தச் சாதனங்களை எதற்காகக் கூடவே எடுத்துச் செல்கிறேன்? அவை இருந்திருந்தால் இந்த அகல்பிதா உங்களுக்குத் தென்பட்டிருக்கவே மாட்டாள்! - இந்தக் குழந்தைக்கு நூறு ஆயுசு!'' என்று கதவைப் பார்த்துக்கொண்டே சொன்னார்.

நான் திரும்பிப் பார்த்தேன். அழகிய சிறு கம்பளிப் போர்வையில் குழந்தையைச் சுற்றி எடுத்துக் கொண்டு அண்ணி வந்தாள். நான் அகல்பிதாவைப் பார்க்க எழுந்தேன்.

''இவள் உங்களுக்குச் செல்வக் குழந்தையாக இருப்பாள்!'' என்று குழந்தையைப் பார்த்துக் கொண்டே சொன்னேன்.

''கடைக்குட்டியிடந்தான் தாய்க்கு அதிக அன்பு இருக்கும்!''

'கடைக்குட்டி' என்ற சொல்லில் இரக்கம் மிகுதியா, அறிவு மிகுதியா? அகல்பிதாவை மார்போடு அணைத்துக்கொண்ட அண்ணியின் மெலிந்த உடலும் மனமும், 'இனிமேல் குழந்தையே வேண்டாம்' என்ற தமது விருப்பத்தை அந்தச் சொல்லிலே வெளிப்படுத்தியதாக எனக்குத் தோன்றிற்று.

இயற்கை மனிதனுக்கு நட்பாக இருப்பதுபோலவே எதிரியாகவும் இருக்கிறது என்பது உண்மைதான்.

# திருட்டுத் தெய்வம்

காலையிலிருந்து மாலைவரைக்கும் அந்தத் தெரு வில் எறும்புச்சாரிபோல மனிதர்கள் போனவண்ணம் இருப்பார்கள். சிற்றெறும்புகளுக்கு நடுவே திடு மென்று கட்டெறும்பு நுழைவதுபோல, அந்தக் கூட்டத்தின் நடுவே ஜட்காவும் காரும் லாரியும் ஓடும்.

அந்தத் தெருவிலுள்ள வாராவதி முனையில் ஒரு நொண்டி தினமும் காலையில் நகர்ந்து வந்து உட்காரு வான். போகிற வருகிற ஒவ்வொருவனையும் பார்த்து, நெஞ்சை உருக்கும் குரலில், "நொண்டிக்கு ஒரு காலணுக் காசு போடு, ஐயா!" என்று கூவுவான்.

பூமி என்னதான் கொதித்தாலும், ஆகாயத்தில் ஒய்யாரமாக உலாவும் வெண்முகிலிலிருந்து ஒரு பொட்டுத் தண்ணீர் விழுவதில்லை. தன்னைத் தாண்டிப் போகிறவர்களை நொண்டி பரிதாபமாகப் பார்ப்பான்.

தினந்தோறும் காலையில் அதே வாராவதியின் மறுமுனையில் ஒரு குருடன் வந்து உட்கார்ந்திருப்பான். "குருடனுக்கு ஒரு காலணுக் காசு போடு, ஐயா!" என்ற அவனுடைய கூக்குரல் நொண்டிக்குக் கேட்கும். அவன் மனம் தவிக்கும். 'என் தட்டிலே ஒரு தம்படி கூடப் போடாத எவனாவது ஒரு கோடீசுவரன் குருட னுடைய தட்டிலே காலணா, ஓரணா, நாலணா – இப்படி ஏதாவது போட்டுவிட்டால்?' என்று அவன் நினைக்க லானான்.

காலடிச் சத்தம் கேட்டதுமே குருடன் குழி விழுந்த கண்களை உயர்த்திப் பரிதாபமாகப் பார்ப்

பான். யமனிடம் கணவனுடைய உயிரைக் கேட்ட சாவித்திரியின் முகத்திலே தென்பட்ட பரிதாபம் குருடனின் கண்ணிலே தெரியும். ஆனால் சாவித்திரியின் காலம் இப்போது மலையேறிவிட்டது என்பதை அவன் அடிக்கடி அநுபவத்திலே கண்டான்.

வெறுந் தட்டை வைத்துக்கொண்டு காலம் தள்ள முடியாது என்பதை நாளடைவில் அவர்கள் இருவரும் உணர்ந்தார்கள். நாம் இப்படியே குந்தியிருந்தால் நம் அதிருஷ்டமும் குந்திவிடும் என்று அவர்கள் எண்ணினார்கள்.

நொண்டி நகர்ந்துகொண்டே குருடனிடம் போனான். அவனுடைய காலடியோசையைக் கேட்ட குருடனும் தடியை ஊன்றிக்கொண்டே அவனை நோக்கிப் புறப்பட்டான். வாராவதியின் நடுவில் இருவரும் சந்தித்தார்கள்.

வெகு நேரம் வரைக்கும் அவர்களுடைய பேச்சு வார்த்தை நடந்தது. ஹிட்லரும் முஸோலினியும் உலகப் போருக்குத் திட்டம் வகுத்ததற்குக்கூட இவ்வளவு நேரம் பிடித்திராது.

அவர்கள் பிரிந்தபோது இருவரின் முகத்திலும் உலகை வென்ற வீரர்களின் முறுவல் மிளிர்ந்தது.

மறுநாள் வாராவதி வழியே போகிறவர்களுக்கு ஏதோ வெறிச்சென்று இருந்தது. வாராவதி முனையில் இந்தப் பக்கம் நொண்டி இல்லை; அந்தப் பக்கம் குருடனும் இல்லை!

'இரண்டு பிச்சைக்காரர்களுக்கும் ஏதாவது போட்டிப்பந்தயத்தில் சரிபாதியாக முதற்பரிசுகிடைத்திருக்குமோ?' என்று ஜனங்களுக்குச் சந்தேகங்கூட

வந்தது. ஆனால் அது அதிக நாள் நீடிக்கவில்லை.

ஊரிலே ஒவ்வொரு சந்து பொந்திலும் அவர்கள் இருவரும் தென்பட்டார்கள். குருடன் நொண்டியின் முதுகில் சவாரி செய்துகொண்டு, "நொண்டிக்குக் காலணாக் காசு போடு, ஐயா!" என்று கத்துவான்.

யானை தன் முதுகிலே அம்பாரியை ஏற்றிக் கொள்வது போல் குருடனைச் சுமந்துகொண்டு, "கண்ணில்லாத கபோதிக்குக் காலணாக் காசு போடு, ஐயா!" என்று நொண்டி கூவுவான்.

அவர்களுடைய அன்பைக் கண்டு ஜனங்கள் வியந்தார்கள்.

வாராவதி வழியே போனபோது தம்படிகூடப் போடாதவர்கள் இப்போது காலணாவாகப் போட்டார் கள். தினமும் தட்டில் ஏழெட்டு அணா விழுந்தது. பிச்சைக்காரர்களுக்குக் கடவுளின் ஞாபகம் வந்தது. அவர்கள் ராமன் படம் ஒன்றை வாங்கி, நாள்தோறும் பூசித்தார்கள்.

ஒரு நாள் - அன்று வைகுண்ட ஏகாதசி - செல்லாத காசை அப்புறப்படுத்தியுங்கூட இரண்டு ரூபாய் தேறியது.

சில்லறைக் காசை ஒரு கடையில் கொடுத்து, அவர்கள் ரூபாயாக மாற்றிக்கொண்டார்கள். பளபளக்கும் இரண்டு வெள்ளி ரூபாய்!

பணத்தை யார் வைத்துக்கொள்வது என்று உடனே சண்டை பிறந்தது.

"பணம் என்னிடந்தான் இருக்க வேண்டும். உனக்கோ கண் தெரியாது. ஹோட்டலிலே எட்டணாவுக்குப் பதில் ரூபாயைக் கொடுத்துவிடுவாய்" என்று

நொண்டி வாதாடினன்.

"என்னிடந்தான் பணம் இருக்கவேண்டும். நீயோ நொண்டி. உன்னுல் ஓட முடியாது. எவனுவது ஒரு சோதாப்பயல் உன்னை ஏமாற்றி ரூபாயைத் தட்டிக் கொண்டு போய்விடுவான்" என்று குருடன் வாதாடினுன்.

வைக்கோற்போரில் தீ வைத்தாற்போல, அந்த ரூபாய் அவர்களைச் செய்துவிட்டது. வசவும் திட்டும் சண்டையும் மும்முரமாயின.

"கடோத்கசனைப்போல இருக்கும் உன்னைச் சுமந்து சுமந்து என் வாயிலிருந்து ரத்தம் கொட்டுகிறதே!" என்ருன் நொண்டி.

"கழுதையான உன் முதுகிலே அடிபட்டுப் பட்டு என் குடலே சரிந்து போச்சே!" என்ருன் குருடன்.

நாக்கு வறண்டது; வசவு தீர்ந்தது

கடைசியில் ஓய்ந்துபோய் இருவரும் ராமன் படத்தின் முன்னுல் ரூபாயை வைத்து, "தெய்வமே, நீயே இந்த வழக்கைத் தீர்த்துவிடு" என்று பிரார்த்தனை செய்தார்கள்.

ராமபிரானுக்கு அவர்கள் சண்டையைக் கண்டு கோபம் வந்தது. படத்துக்கு எதிரே விழுந்து கிடந்த பணம், "தெய்வமே, நான் குருடனுக்கு மட்டுமோ நொண்டிக்கு மட்டுமோ உரிய பொருளல்ல. நீயே இந்த வழக்கைத் தீர்த்துவிடு!" என்றது.

அந்தச் சண்டையைத் தீர்ப்பது அந்தப் பரம் பொருளுக்கே பெரிய சிக்கலாக இருந்தது. அவர் வெகுநேரம் சிந்தித்த பின்பு, 'குருடனுக்குக் கண்ணும் நொண்டிக்கு நடக்கும் சக்தியும் கொடுத்தால் இந்தச்

சண்டை தீரும். ஒருவர் மற்றவரைச் சார்ந்து வாழ வேண்டியிராது. அவனவன் சம்பாத்தியம் அவனவனிடம் தனியாக இருக்கும்' என்று முடிவு கட்டினார்.

ராமபிரான் நொண்டிக்குத் தரிசனம் தந்து, "உனக்கு ஒரு வரம் கொடுக்கிறேன்; கேள்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

'ஆண்டவனே, என் காலால் நான் நடக்கும்படி அருள் செய்' என்றுதான் அவன் கேட்பான் என்று கடவுள் நம்பியிருந்தார். அவனுடைய காலைத் தடவிக் கொடுக்க அவர் தயாராக இருந்தார். அதற்குள் அவன் பேச்சு அவர் காதில் விழுந்தது: "தெய்வமே, எனக்கு ஒரே ஒரு விருப்பந்தான். இதோ தூங்குகிற குருடனை நொண்டியாக்கிவிடு."

கடவுளுக்குக் கனவு காண்பதுபோல இருந்தது. குருடனை நொண்டியாக்க அவர் திருவுள்ளம் இசையவில்லை.

அவர் குருடனை நோக்கி, "நான் உனக்கு ஒரு வரம் தருகிறேன். என்ன வேண்டுமோ, நன்றாக யோசித்துக் கேள். எதைக் கேட்டாலும் தருகிறேன்" என்றார்.

அவனுடைய கண்ணைத் தொட அவர் தயாராக நின்றார்.

ஆனால் குருடன் சிரித்துக்கொண்டே, "தெய்வமே, எனக்கு ஒரே ஒரு விருப்பந்தான். இதோ கிடக்கும் நொண்டியைக் குருடனாக்கிவிடு" என்றான்.

கண்ணும் குருடாகி, காலும் நொண்டியான அந்த இரண்டு பிச்சைக்காரர்களும் மறுநாள் காலையில் ராமன் படத்தண்டை போய் ரூபாயைத் துழாவித்

தேடினார்கள். என்ன செய்தும் அது அகப்படவில்லை.

இருவரும் கலகலவென்று நகைத்து, "இது பெரிய வேடிக்கையாகத்தான் இருக்கிறது! நம்முடைய பணத்தை இந்தத் தெய்வந்தான் திருடியிருக்கிறது" என்றார்கள்.

கைக்கு எட்டிய அந்த ராமன் படத்தை இருவருமாகச் சேர்ந்து தொலைவில் விட்டெறிந்தார்கள்.



முற்றும்



# கதாசிரியர் காண்டேகர்

**வி. ஸ. காண்டேகருக்கு** இப்பொழுது வயது 52 இவருடைய தகப்பனர் ஸாங்க்லி ஸம்ஸ்தானத்தில் முனிசிப்பாக இருந்தவர். காண்டேகரின் சிறுபருவம் அங்கே தான் கழிந்தது. சிறுவயதில் இவருக்குப் படிப்பைவிட விளையாட்டும், கூத்துப் பார்ப்பதும், கிருஷ்ணு நதியில் நீச்சடிப்பதும், பள்ளிக்கூடம் விட்டதும் கிரிக்கெட் விளையாடுவதும், விடுமுறை நாட்களில் தம் பால்ய நண்பன் (இப்பொழுது புரொபஸர்) ராம்பாவூவின் வீட்டில் பையன்களைக் கூட்டி நாடகம் நடிப்பதும் மிகவும் பிடிக்கும். அப்பொழுது அர்ஜுனன் முதல் கைகேயி வரையில் பல பாத்திரங்களாக இவர் நடித்திருக்கிருர். மிஞ்சியிருக்கும் நேரத்திலே இவர் நிறையப் படிப்பார். ஆயிரக்கணக்கான பக்கங்கள் உள்ள நாவல்களை ஒரே இரவில் படித்து முடிப்பார்.

வக்கீலாகும் வாய்ப்பு இருந்தும் சமூகத் தொண்டிலே இவர் ஈடுபட விரும்பினர். சிரோடே என்ற ஒரு பட்டிக் காட்டில் ஆங்கிலப் பள்ளியை நடத்தும் பொறுப்பை இவர் ஏற்றுக்கொண்டார். மாதம் இருபது ரூபாய் சம்பளத்தில், சிறந்த நண்பர்களின் உதவிகொண்டு, அறிவைப் போதிக்கும் இந்தத் தூய தொண்டை இவர் தொடங்கினர். தலைமை உபாத்தியாயரான இவர், பல இடையூறுகளையும் எதிர்ப்புகளையும் சமாளித்துத் தீரத்துடன் செயலாற்றினர். மாணவர்களுக்கு நண்பராக இவர் பழகினர்.

1925- இலிருந்துதான் இவர் மும்முரமாக எழுத ஆரம்பித்தார். பின்பு பத்து வருஷங்களுக்கெல்லாம் சினிமாப் படங்களுக்குக் கதை எழுதலானர். இவர் எழுதிய 'நிழல்' (சாயா) என்னும் திரைக் கதைக்கு, 'கோஹர் மெடல்' கிடைத்தது. சினிமா வேலைகளாலும்,

எழுத்து வேலைகளாலும் பள்ளிக்கூடத்தைக் கவனிக்க முடியாமல், ராஜீநாமாச் செய்து கோல்ஹாபூருக்கு வந்து தங்கினார்.

பல வருஷங்களுக்கு முன்பு இரண்டு முறை கட்டு விரியன் தீண்டி இவர் பிழைத்ததே புனர்ஜன்மம் ஆயிற்று. பிறகு எத்தனையோ டாக்டர்கள் பல வைத்தியங்கள் செய்தும் இவர் உடம்பில் ஊறிய விஷம் இன்னும் நோய்களுக்குக் காரணமாகவே இருக்கிறது. இவருக்குத் தலைவலியாவது இல்லாத நாளே கிடையாது. இந்த உடல் நிலையிலும் இவர் இதுவரையில் சுமார் முந்நூறு சிறு கதைகளும், பல சிறு கட்டுரைகளும், ஒரு டஜனுக்கு மேற்பட்ட நாவல்களும், நாலைந்து கட்டுரைத் தொகுதிகளும், ஏழெட்டுத் திரைக் கதைகளும் எழுதியிருக்கிறார். பல இலக்கிய மகாநாடுகளுக்குத் தலைமை தாங்கி, தம் இலக்கியக் கொள்கைகளையும் கருத்துக்களையும் வெளியிட்டிருக்கிறார். சிறு கட்டுரை என்பது இவர் இலக்கியத்தில் தோற்றுவித்த புதுத் துறை.

மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் பரோடா ஸம்ஸ்தானம் இவரை விசேஷமாகக் கௌரவித்தது. மராட்டியக் கதையுலகில் இணையற்றவராகவும், இந்தியக் கதாசிரியர்களில் பெரும் புகழ்பெற்ற நால்வரில் ஒருவராகவும் இவர் இன்று விளங்குகிறார்.

கா. ஸ்ரீ. ஸ்ரீ.